திரும்பி வருவதை விரும்பவில்லை என்பதில் சந்தேகத்துக்கு இடமேயில்லை. ஞாயிற்றுக்கிழமை விவாதங்கள் காலை நேரத்தில் நடப்பதால் அவன் திரும்பி வந்துவிடக்கூடும் என்றால், அன்று அந்த விவாதங்களை விட்டுவிடுவது நல்லதுதானே! இத்தனை நேரம் யோசனையில் மூழ்கி ஒரு முடிவுக்கு வந்து விட்ட பாக்ஸர் தனது அபிப்பிராயத்தை தெளிவாகச் சொல்லி விட்டது. "தோழர் நெப்போலியன் அப்படிச் சொன்னால் அது சரியாகத்தான் இருக்கும்." அந்த நிமிஷம் முதல் அதுவும் மற்ற விலங்குகளும், "நெப்போலியன் செய்வதே சரி" என்ற ஒரு கொள்கையைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்தன. "இன்னும் சிரமப் பட்டு உழைப்பேன்" என்கிற தன் சொந்தக் கொள்கையுடன் இதையும் சேர்த்துக்கொண்டது பாக்ஸர்.

இதற்குள் பருவம் மாறிவிட்டது. வசந்தகாலத்து உழவு தொடங்கிவிட்டது. காற்று இயந்திரத் திட்டத்தை வரைந்திருந்த கொட்டகை சாத்திப் பூட்டப்பட்டது. தரையிலிருந்த படங்களும் கணக்குகளும் திட்டங்களும் அழிக்கப்பட்டிருக்கும் என்றுதான் மற்ற விலங்குகள் எண்ணிக் கொண்டிருந்தன. ஒவ்வொரு ஞாயிறன்று காலையில் பெரிய கொட்டகையில் கூடிய விலங்குகள், வாரத்து வேலைகளைப் பற்றிய உத்தரவுகளைப் பெற்றுக்கொண்டு கலைந்தன. கிழட்டுத் தளபதி பன்றியின் மண்டையோடு பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டு, துப்பாக்கிக்குப் பக்கத்தில், கொடி மரத்தின்மேல் வைக்கப்பட்டது. கொடியைப் பறக்க விட்டபின், மிருகங்களெல்லாம் அந்த மண்டையோட்டை வணங்கி, மரியாதையுடனும் பணிவுடனும் கொட்டகைக்குள் வரவேண்டும் என்று ஆணை விதிக்கப்பட்டது. முன்னெல்லாம் போல இப்போது எல்லா விலங்குகளும் சரிசமமாக உட்காருவ தில்லை. கவிகள் புனைந்து பாடுவதில் வல்ல மினிமஸ் என்ற ஒரு பன்றியும், ஸ்க்வீலரும், நெப்போலியனும் மேடைமேல் உட்காரும், அவற்றிற்குப் பின்னால் அர்த்த சந்திர வடிவத்தில் ஒன்பது வேட்டை நாய்களும் நின்றன. மேடைமேல் மற்ற பன்றிகள் எல்லாம் நெப்போலியனுக்குப் பின்னால் உட்கார்ந் திருந்தன. கொட்டகையின் கீழ் பரப்பில் மற்ற எல்லா விலங்குகளும் நெப்போலியனைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தன. அந்த வாரத்துக்குரிய உத்தரவுகளை நெப்போலியன் உரத்த, ராணுவ அதிகாரக் குரலில் வாசிக்கும். பின்னர் 'இங்கிலாந்தின் விலங்குகள்' பாட்டை ஒருதரம் பாடிவிட்டு விலங்குகள் கலைந்துவிடும்.

ஸ்நோபாலை விரட்டியடித்த மூன்றாவது ஞாயிறன்று, ஸ்நோபாலின் காற்றாடி இயந்திரம் எப்படியும் நிர்மாணிக்கப் படும் என்று நெப்போலியன் அறிவித்தபோது, மற்ற விலங்கு களெல்லாம் ஆச்சரியப்பட்டன. தனது மனம் மாறியதற்கான காரணம் எதையும் நெப்போலியன் சொல்லவில்லை. ஆனால், காற்றாடி இயந்திரம் நிர்மாணிப்பதற்கு விலங்குகள் எல்லாமாகச் சேர்ந்து வெகுவாகப் பாடுபடவேண்டும் என்று மட்டும் உசார்படுத்தியது நெப்போலியன். கொடுக்கப்படும் உணவின் அளவுகூடக் கொஞ்சகாலம் குறையலாம் என்று சொல்லிற்று. கடைசிப் புள்ளிவிவரங்கள், கோடுகள், ஆணிகள், சக்கரங்கள் வரையில் எல்லாம் சரிவரப் பூரணமாகத் தயாராகிவிட்டன. மூன்று வாரங்களாக ஒரு பிரத்தியேகப் பன்றிக் கமிட்டி அந்த வேலைகளைக் கவனித்து வந்ததாம்; பல புது சீர்திருத்தங் களுடன் காற்றாடி இயந்திரம் நிர்மாணமாக இருக்கிறது; இரண்டு வருஷங்களில் கட்டிமுடித்துவிடலாம் என்றும் அறிவித்தது நெப்போலியன்.

அன்று மாலை ஸ்க்வீலர் பன்றி ஒவ்வொரு விலங்கினிடமும் போய், ஆரம்ப முதலே "நெப்போலியன் காற்றாடி இயந்திரத்தை உண்மையில் எதிர்க்கவேயில்லை என்று ஸ்தாபிக்க முயன்றது. அது கூறியதாவது: நெப்போலியன்தான் காற்றாடி இயந்திர யோசனையை முதலில் சொன்னது; அதற்கான திட்டங்களையும் வரைந்து ரகசியமாக வைத்திருந்தது. ஸ்நோபால் அந்தத் திட்டத்தைத் திருடித் தன்னுடையதாக வெளியிட்டது" என்று எல்லா விலங்கு களுக்கும் புரியக்கூடிய மொழியில், விவரமாக சொல்லிற்று ஸ்க்வீலர். காற்றாடி இயந்திரம் என்பது நெப்போலியனின் தனி முழு சிருஷ்டிதான் என்றது அது. "அப்படியானால் ஏன் நெப்போலியன் முதலில் அதை அப்படி ஆட்சேபித்தது?" என்று ஒரு விலங்கு கேட்டது. இதைக் கேட்ட ஸ்க்வீலர் கெட்டிக்காரத் தனமாக ரகசியக் குரலில் சொல்லிற்று: "அதுதான் தோழர் நெப்போலியனின் கெட்டிக்காரத்தனம்" என்றது அது. "காற்றாடி இயந்திரத்தை எதிர்ப்பதாக வேசம் போட்டதே தவிர வேறு அல்ல. அப்படி வேஷம் போட்டால் தானே, தந்திரமாக ஸ்நோபாலை விரட்டிவிட்டு தன் கற்பனையை, தன் திட்டத்தைத் தானே நிறைவேற்றவும் வழி ஏற்பட்டது! ஏன் ஸ்நோபாலை விரட்டவேண்டும் என்று கேட்டால், அது தீய குணங்கள் படைத்த விலங்கு; விலங்குகளின் எதிரி; மற்றவர்கள் வேலை செய்வதையும் தடுக்கும் துர்க்குணம் படைத்த துரோகி, இதெல்லாம் ராஜ்ய தந்திரம்" என்றது ஸ்க்வீலர். பலதடவைகள், "தந்திரம் தோழர்களே, ராஜ்ய தந்திரம்" என்று சொல்லிற்று ஸ்க்வீலர். ராஜ்ய தந்திரம் என்றால் என்னவென்று விலங்குகளுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை என்பது உண்மைதான்.

எனினும் ஸ்க்வீலர் அப்படி ரகசியக் குரலில், எல்லாம் தெளிவாகிவிட்ட மாதிரிப் பேசும்போது, அவை என்ன செய்யமுடியும்? புரிந்து விட்ட மாதிரி பேசாதிருந்துவிட்டன. போதாதற்கு அதன் கட்சியை வலியுறுத்த நெப்போலியனின் மூன்று வேட்டை நாய்களும் ஸ்க்வீலர் பக்கத்தில் வந்து நின்றுகொண்டு, மற்ற விலங்குகளைப் பார்த்து உறுமிக்கொண்டிருந்தன. வேறு கேள்விகள், சந்தேகங் களைக் கேட்டு விவாதத்தை வளர்க்காமல், மற்ற விலங்குகள் ஸ்க்வீலர் சொன்ன விளக்கவுரையை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்துவிட்டன.

# 6

அந்த வருஷம் பூராவும் விலங்குகள் எல்லாம் அடிமைகள் போல வேலை செய்தன . ஆனால் , வேலை செய்வதிலே ஒரு ஆனந்தம் இருப்பதைக் கண்டன அவை . எந்தத் தியாகமும் செய்யத் தயங்கவில்லை அவை . எப்படிப் பாடுபட வேண்டுமானாலும் பாடுபடத் தயாராகவே இருந்தன . எது செய்தாலும் கடைசியில் தங்களுக்கே அது லாபகரமான தாக இருக்கும் என்று அவற்றிற்கு நம்பிக்கை இருந்தது . தங்கள் வாழ்நாளில் அது லாபந்தரா விட்டாலும் , பிற்கால சந்ததியருக்கு நிச்சயம் பலன்தரும் என்கிற நம்பிக்கையில் அவை எதையும் கஷ்டப்பட்டுச் செய்யத் தயாராக இருந்தன . தவிரவும் தங்கள் உழைப்பினால் சோம்பேறிகளான மனிதர்கள் , திருட்டுப்புத்தி யுள்ள மனிதர்கள் நிச்சயமாக லாபமடைய மாட்டார்கள் என்கிற நம்பிக்கையும் அவைகளை வெகுவாக ஊக்கி முன்னேறச் செய்தது .

வசந்தத்திலும் கோடையிலும் அவை வாரத்தில் அறுபது மணிநேரம் வேலை செய்தன. ஆகஸ்டு மாதத்தில், இனிமேல் ஞாயிறன்று மாலை நேரத்திலும் அவை உழைத்தாகவேண்டும் என்று நெப்போலியன் உத்தரவிட்டது. தானாக விருப்பத்துடன் ஏற்றுக்கொண்ட வேலை தான் அது. ஆனாலும் எந்த விலங்காவது அப்படி வேலை செய்யத் தவறினால், கொடுக்கப்படும் உணவு பாதியாகக் குறைக்கப்படும் என்று நெப்போலியன் சொல்லிற்று. இப்படி யெல்லாம் உழைத்தும், பல வேலைகள் செய்யப்படாமலும், பூர்த்தியாகாமலுந்தான் இருந்தன. முந்திய வருஷத்தைவிட அறுவடை குறைவாகவே இருந்தது. கோடை ஆரம்பத்தில் கிழங்கு நடவேண்டிய இரண்டு வயல்களில் கிழங்கு நடவேயில்லை; வயல்கள் உரிய சமயத்தில் உழுது பண்படுத்தப்படவில்லை. அடுத்த மாரிக்காலத்தில் கஷ்டங்கள் இன்னும் அதிகமாகிவிடும் என்று கண்டுகொள்வது சுலபமாகவே இருந்தது.

காற்றாடி இயந்திரம் நிர்மாணிக்கும் வேலையும் சற்று எதிர் பார்த்ததைவிடக் கடினமானதாகத்தான் இருந்தது. எதிர்பாராத சில கஷ்டங்களும் முளைத்தன. கல் வெட்டி எடுக்க, சுக்காங்கற் குன்று ஒன்று

பண்ணையிலே இருந்தது. பண்ணையிலே போதுமான சுண்ணாம்பும் சிமிட்டியும் தயாராக இருந்தன. கட்டிடம் கட்டுவதற்குத் தேவையான சாமான்கள் எல்லாம் சுலபமாகவே கிடைத்தன. ஆனால், அந்தக் கற்களைத் தேவையான அளவுக்கு எப்படி உடைத்துச் சேர்ப்பது என்பதுதான் முதலில் விலங்கு களுக்குத் தெரியவில்லை. கற்கோடரியையும் சம்மட்டியும் கொண்டுதான் இதைச் செய்யமுடியும் போல இருந்தது. ஆனால், இதை உபயோகிக்க விலங்குகளால் முடியாது. பின்னங் கால்களால் நின்றுகொண்டால் ஒழிய இது சாத்தியமல்ல. பல வாரங்கள் தொடர்ந்து பல முயற்சிகள் செய்தபின்தான், சரியான யோசனை ஒரு விலங்குக்குத் தோன்றியது. குன்றின் மேலிருந்து கற்களை உருட்டிவிட்டால், தானாகவே கீழே விழுந்து அவை சிறுசிறு கற்களாக நொறுங்கிவிடும் என்பதுதான் அந்த யோசனை. கீழே பெரிய கற்கள் கிடந்தன. அவற்றை ஒன்றன்பின் ஒன்றாகக் குன்றின் மேல் எல்லா விலங்குகளுமாகச் சேர்ந்து புரட்டிக் கொண்டு போய் உச்சியிலிருந்து உருட்டித் தள்ளின. உச்சியில் கொண்டுபோய்க் கற்களைச் சேர்ப்பதுதான் மிகவும் கஷ்டமான காரியமாக இருந்தது. கயிற்றைக் கட்டி, ஆடு, மாடு, குதிரை எல்லாமாகச் சேர்ந்து மேலே இழுத்தன; அவசியமான போது இந்த வேலையில் பன்றிகள்கூட உதவின. உடைந்த கற்களைக் கொண்டுவந்து காற்றாடி இயந்திரம் கட்டவேண்டிய இடத்தில் சேர்ப்பது சுலபமான வேலைதான். வண்டியில் போட்டுக் குதிரைகள் கொணர்ந்தன; சில ஆடுகள் ஒவ்வொரு கல்லாகப் புரட்டிக் கொணர்ந்து சேர்த்தன; முரியலும் பெஞ்சமினும்கூட பழைய ரேக்ளா வண்டியில் கற்களைப் போட்டு இழுத்துக் கொணர்ந்து சேர்த்தன. கோடை முடிவுக்குள் தேவையான கற்கள் வந்து சேர்ந்துவிட்டன. பன்றிகளின் மேற்பார்வையில் அதற்குப் பிறகு கட்டிட வேலை தொடங்கிற்று.

ஆனால், அது மிகவும் மெதுவாக, மிகவும் மெதுவாக நடந்தது. மிகவும் சிரமமான காரியமாகத்தான் இருந்தது. ஒரு நாள் முழுதும் அலுப்புத் தருகிற வகையிலே முழு முயற்சியும் செய்தால், ஒரு பெரிய கல்லைக குன்றின் மேல் எல்லா விலங்குகளு மாகச் சேர்ந்து உருட்டி ஏற்ற முடிந்தது. சில சமயம் கீழே புரட்டிவிடப்பட்ட கல் உடையவில்லை. பாக்ஸர் மட்டும் முழு மனதுடன் வேலை செய்யவில்லை என்றால் அந்தக் காரியமும் உருப்படியாக நடைபெற்றிராது. மற்ற எல்லா விலங்குகளும் சேர்ந்து சாதித்த காரியங்களை பாக்ஸர் தனியாகவே நின்று சாதிக்கும் வலுவும் உறுதியும் பெற்றிருந்தது. குன்றின் சரிவிலே ஏற்றிக்கொண்டிருந்த பெரிய கல் நழுவ ஆரம்பிக்கும்; மற்ற மிருகங்கள் எல்லாம் சேர்ந்தும் சமாளிக்க முடியாமல் திணறும்; விலங்குகளும்

சேர்ந்து சரிவிலே நழுவிக் கீழே இழுத்துச் செல்லப் படும். அப்போதெல்லாம் கயிற்றை இழுத்துப் பிடித்து கல் சரியாமலும், விலங்குகள் நழுவி விழுந்து உயிர் இழந்துவிடாமலும் காப்பாற்றியது பாக்ஸர்தான். மூச்சுத் திணற ஒவ்வொரு அங்குலமாக அது கல்லையும் கட்டி இழுத்துக்கொண்டு சரிவிலே ஏறுவதைப் பார்க்கும்போது அற்புதமான நம்பிக்கையூட்டும் காட்சியாகத் தான் இருந்தது அது. உடலெல்லாம் வியர்வை அரும்பி வழிந் தோடும்; கால் குளம்புகள், பூமிக்குள் பள்ளமே பறித்துவிடும் போல அழுந்தும்; எல்லா விலங்குகளும் அதிசயத்துடனும் ஆச்சரியத்துடனும் பாக்ஸர் வேலை செய்ய ஊக்கமும் கொள்ளும். இப்படி அதிக வேலை செய்தால் உடல் கெட்டு விடும் என்று சில சமயம் க்ளோவர் பாக்ஸருக்குச் சொல்வதுண்டு. ஆனால், பாக்ஸர் அதைக் காதில் போட்டுக்கொள்ளாது. அதனுடைய இரண்டு ஆதாரக் கொள்கைகள் “இன்னும் அதிகமாக நான் உழைப்பேன்” என்பதும், “நெப்போலியன் செய்வதே சரி” என்பதும்தான். எல்லாப் பிரச்சினைகளுக்கும் சந்தேகங்களுக்கும் அந்த இரண்டு ஸ்லோகங்களில் பதில் அடங்கியிருந்தது, பாக்ஸரைப் பற்றிய வரையில். ஒரு சேவலிடம், மற்றவர்கள் எழுந்திருப்பதற்கு அரைமணி நேரத்திற்கு முன்னால் தன்னை எழுப்பிவிடும்படி ஏற்பாடு செய்துகொண்டிருந்தது. முதலில் அரைமணி நேரம் முன்னால் எழுந்த பாக்ஸர், சில நாட்களுக்குப் பிறகு முக்கால்மணி நேரத்திற்கு முன்னதாக எழுந்திருக்கப் பழகிக்கொண்டது. இப்பொழுதெல்லாம் ஒழிந்த நேரம் என்று சொல்ல நேரமே கிடையாது அதற்கு. ஆனால், ஒரு விநாடி நேரம் கிடைத்தால்கூட அது தானாகவே கல் பட்டறைக்குப் போய், ஒரு கூடை உடைத்த கற்களைச் சுமந்து வரும். பிறர் உதவியை நாடாமல் செய்யக்கூடிய காரியங்களை எல்லாம் தானாகவே செய்துவிடும் அது.

வேலைதான் கடுமையாக இருந்ததே தவிர, மற்றபடி அந்தக் கோடை பூராவும் விலங்குகளெல்லாம் சௌகரியமாகவே இருந்தன. ஜோன்ஸ் காலத்தில் கிடைத்ததைவிட அதிகமான உணவு கிடைக்கவில்லை என்றாலும், அதே அளவாவது கிடைக்கிறதே என்று சந்தோஷப்பட்டன அவை. தங்களைத் தவிர வேறு யாருக்கும் உணவு சம்பாதிக்கவேண்டிய தேவை யில்லை; மனிதர்களுக்கு சம்பாதித்துத் தரவேண்டிய அவசியம் இல்லாததற்காக அவை எத்தனை அசௌகரியங்களை வேண்டு மானாலும் ஏற்கத் தயாராக இருந்தன. பல காரியங்களில், மனிதர்கள் செய்ததைவிடச் சுலபமாகவும், சீக்கிரமாகவும் வேலைகளைக் செய்துமுடித்தன விலங்குகள்; எந்தக் காரியத்தை யாவது செய்து முடிப்பதற்கு விலங்குகள் கையாண்ட முறை, மனிதர்கள் கையாண்ட முறைகளைவிட ரொம்பத் திறமை வாய்ந்ததாக இருந்தது. உதாரணமாக

களை பிடுங்கும் வேலையை, மனிதர்களைக் காட்டிலும் விலங்குகள் பூரணமாகச் செய்ய முடியும் என்பதில் சந்தேகம் என்ன? தவிரவும் விலங்குகள் எதையும் இப்போது திருடுவதில்லை. ஆகவே தானிய வயல்களைச் சுற்றி வேலிகள் அவசியமில்லாது போய்விட்டது. வேலிகளையும் கதவுகளையும் அமைத்துக் காப்பாற்றவேண்டிய வேலையும் குறைந்தது. இருந்தும், கோடைக்காலம் செல்லச் செல்ல எதிர் பாராத பல குறைபாடுகள் பண்ணையிலே தெரியத் தொடங்கின. பாரஃபின், எண்ணெய், ஆணிகள், கயிறு, நாய் பிஸ்கோத்துகள், லாடத்துக்கு இரும்பு முதலியனவெல்லாம் தேவைப்பட்டன. ஆனால், அவற்றைப் பண்ணையில் உற்பத்தி செய்யமுடியாது. விதைகள் மற்றும் செயற்கை எரு முதலியனவும் பின்னால் தேவைப்படும். அது தவிர விதவிதமான கருவிகள் வேண்டியதாக இருந்தன. கடைசியாக காற்றாடி இயந்திரத்துக்கு அவசியமான பாகங்கள் வேறு தேவைப்பட்டன. இவற்றையெல்லாம் எப்படிச் சேர்ப்பது என்றுதான் விலங்குகளுக்கெல்லாம் புரியவில்லை.

ஒரு ஞாயிறன்று காலையில், விலங்குகள் எல்லாம் பெரிய கொட்டகையில் கூடியிருந்தபோது, நெப்போலியன் ஒரு புது நடைமுறைக் கொள்கையை வெளியிட்டது. அதைத் தானே தீர்மானித்து முடிவுகட்டிவிட்டதாக வெளியிட்டது. இப்போது முதல் விலங்குகள் பண்ணை, சுற்றிலும் இருந்த மற்ற பண்ணை களுடன் உறவு கொண்டாடி, பேரம் பண்ணி, அவசியமான பொருள்களை வாங்கிக்கொள்ளும். இப்படிப் பேரம் செய்வது கேவலம் வியாபாரார்த்தம் அல்ல. அவசியமான பல தேவைகளைத் திருப்தி செய்துகொள்வதற்காக இந்த பேரம் அவசியமாகிறது என்றது நெப்போலியன். மற்ற எல்லாவற்றையும் விட அதிமுக்கிய மானதாகக் காற்றாடி இயந்திரத்தின் தேவைகளைக் கருத வேண்டும் என்றது அது. பண்ணையின் எதிர்கால சுபிட்சம் காற்றாடி இயந்திரத்தைப் பொறுத்தது என்பதனால் அது அத்தியாவசியமாயிற்று என்றது. ஆகவே வைக்கோல் போர்களில் சிலவற்றையும், அறுவடை செய்த கோதுமையில் ஒரு பங்கையும் விற்கவேண்டியது என்று தான் தீர்மானித்துவிட்டதாக அறிவித்தது நெப்போலியன். பின்னர், இன்னும் பணம் வேண்டியதாக இருந்தால், கோழிகள் இட்ட முட்டைகளையும் விற்கவேண்டி நேரிடலாம். வில்லிங்டன் கிராமத்தில் கோழி முட்டைகளுக்கு எப்போதுமே கிராக்கியுண்டு; விலைபோகும். காற்றாடி இயந்திரத்தை நிர்மாணிக்க கோழிகள் செய்யும் பிரத்தியேகத் தியாகமாக இதை எண்ணி, அவை ஏழேழு ஜன்மத்துக்கும் பெருமைப்படலாம் என்றது

நெப்போலியன்.

மீண்டும் மிருகங்களிடையே தெளிவில்லாத ஒரு அதிருப்தியும் அவநம்பிக்கையும் தலைதூக்கின. மனிதர்களுடன் எந்த மாதிரியும் பழகுவதில்லை; வியாபாரத்தில் எக்காரணம் கொண்டும் ஈடு படுவதில்லை; பணத்தைக் கையிலும் தொடுவதில்லை - என்பவை யெல்லாம் புரட்சிக்கே ஆதாரமான கொள்கைகள் அல்லவா? ஜோன்ஸை அடித்து விரட்டியவுடன், மிருகங்கள் கூடித் தீர் மானித்துக் கொண்ட அடிப்படை விஷயங்கள் அல்லவோ அவையெல்லாம்? விலங்குப் புரட்சி வெற்றியின் அஸ்திவாரமே அவைதானே? இப்படித் தீர்மானங்கள் செய்த விஷயம் பல மிருகங்களுக்கும் நன்றாகவே ஞாபகம் இருந்தது; அல்லது ஞாபகம் இருப்பதுபோல இருந்தது. நெப்போலியன் விவாதக் கூட்டங்கள் தேவையில்லை என்று சொன்னபோது, அதை எதிர்த்து இரண்டு வார்த்தைகள் கூறிய நான்கு வாலிபப் பன்றிகள் இப்போதும் அதிகத் தெம்பில்லாமல், இது பற்றித் தங்கள் சந்தேகங்களை வெளியிட்டன. ஆனால், அவர்களைப் பார்த்து வேட்டை நாய்கள் உறுமத் தொடங்கியவுடனே வாயை மூடிக் கொண்டுவிட்டன. உடனே ஆடுகள் 'நாலுகால் நல்லது; இரண்டு கால் கெட்டது, என்கிற பாட்டைத் தொடங்கியதும், துணிச்சலற்ற எதிர்ப்புக் குரல்கள் யார் காதிலும் விழவேயில்லை. யாரோ எதிர்த்தார்கள் என்கிற அசட்டுக் காரியமே அமுங்கிப் போய் விட்டது. கடைசியில் மௌனமாக இருங்கள் என்பதற்கு அறி குறியாக நெப்போலியன் ஒரு காலைத் தூக்கிக் காட்டிவிட்டு, ஏகமனதாக நிறைவேறிய இந்தத் தீர்மானத்தின்படிச் செயலாற்ற வேண்டியதற்கான வழிகளெல்லாம் ஏற்கனவே செய்யப்பட்டு விட்டதாக அறிவித்தது. விலங்குகளில் எதுவும் எந்த மனிதனையும் அணுகவேண்டிய அவசியமே கிடையாது. அப்படி நேர்ந்தால் அது நல்லதற்கல்ல என்கிற அபிப்பிராயத்தை அது ஆணித்தர மாகத் தெரிவித்தது. எனவே, தானே இந்த அவசியமான, ஆனால், வெறுக்கவேண்டிய பொறுப்பை ஏற்று நடத்தச் சித்தமாக இருப்பதாகத்

தெரிவித்தது நெப்போலியன். கிராமத்தில் வசித்த திரு. விம்பர் என்கிற ஒரு வக்கீல் மூலம் விலங்குப் பண்ணையின் கொடுக்கல், வாங்கல் காரியங்களெல்லாம் நடைபெற ஏற்பாடு செய்திருந்தது நெப்போலியன். வெளியுலகுக்கும் விலங்குப் பண்ணைக்கும் உள்ள ஒரே தொடர்பு அந்த வக்கீல்தான். ஒவ்வொரு திங்கள் அன்றும் அந்த வக்கீல் பண்ணைக்குள் வந்து ஒரு வாரத்துக்கான தகவல்களைப் பெற்றுக்கொண்டு செல்வார். இத் தகவல்களைக் கூறிய நெப்போலியன், "விலங்குப் பண்ணை வாழ்க! வாழ்க!" என்று சொல்லி வழக்கம்போல தனது பிரசங்கத்தை முடித்தது. உடனே விலங்குகள் எல்லாம் 'இங்கிலாந்தின் விலங்குகள்' என்ற பாட்டைப் பாடிவிட்டுக் கலைய அனுமதிக்கப் பட்டன.

இதற்குப் பிறகு, ஸ்க்வீலர் பன்றி விலங்குப் பண்ணையில் அங்குமிங்கும் ஓடித் திரிந்து, விலங்குகளின் மனதில் எழுந்த சந்தேகங்களையெல்லாம் நிவர்த்தி செய்து வைத்தது. வியாபாரம் செய்வதில்லை என்றோ, பணத்தையே தொடுவதில்லை என்றோ புரட்சிக்குப்பின் தீர்மானங்கள் நிறைவேற்றப்படவேயில்லை என்று சாதித்தது அது. அப்படிப்பட்ட தீர்மானங்களை யாரும் கொண்டுவரவே இல்லை என்றது அது. கற்பனைதான் அது; ஸ்நோபால் கிளப்பிவிட்ட அநேக பொய் வதந்திகளில் அதுவும் ஒன்றாக இருந்தாலும் இருக்கலாம் என்றது ஸ்க்வீலர் பன்றி. சில விலங்குகளுக்கு இன்னும் கொஞ்சம் சந்தேகமாகத்தான் இருந்தது. ஸ்க்வீலர் அவற்றைக் கேட்டது: "இப்படியெல்லாம் தீர்மானங்கள் செய்ததாக நீங்கள் கனவு கண்டிருப்பீர்கள். சில தோழர்கள் கனவு கண்டால், அது உண்மை என்று அர்த்தமாகி விடுமா என்ன? எங்கேயாவது இந்தத் தீர்மானங்களை எழுதி வைத்திருக்கிறோமா, சொல்லுங்கள்? எங்கும் எழுதப்படாத தீர்மானங்களை நிறைவேற்றியதாக எப்படிச் சொல்லமுடியும்?" உண்மைதான், எங்கும் இத்தீர்மானங்கள் எழுதிவைக்கப்பட வில்லை என்பது உண்மைதான். சந்தேகப்பட்ட விலங்குகள் தாங்கள் நினைத்தது தவறாகத்தான் இருக்கும் என்று தங்கள் மனதைத் தேற்றிக் கொண்டன.

ஏற்பாடு செய்யப்பட்டபடி ஒவ்வொரு திங்களன்றும் திரு. விம்பர் விலங்குப் பண்ணைக்கு விஜயம் செய்தார். கிருதா மீசையுடன் தந்திரக்கார மனிதர்போலத் தோற்றமளித்தார் அவர். மிகவும் சொற்பமாகத்தான் அவருக்குத் தொழில் நடந்தது. ஆனால், அவர் கெட்டிக்காரர் என்று தெரிந்தது. மற்ற பண்ணை களுடன் பேச்சு நடத்த விலங்குப் பண்ணைக்கு ஒரு வக்கீல் தேவையாக இருக்கும் என்பதை எல்லோருக்கும்

முன்னாலேயே தெரிந்துகொண்டார். அங்கு கிடைக்கக்கூடிய லாபம், கமிஷன் முதலியன போதுமானவையாக இருக்கும் என்பதையும் அறிந்து, அந்தப் பதவியைத் தேடிக்கொண்டார் அவர். அவர் வந்து போவதை ஒருவித பயத்துடனும் பீதியுடனும் பார்த்தன விலங்குகள் எல்லாம். அவர் பக்கம் அவை போவதேயில்லை. இருந்தாலும், நிமிர்ந்து இரண்டு கால்களில் நின்றுகொண்டிருந்த விம்பர் என்ற மனிதன், நாலுகால் பன்றியாகிய நெப்போலியனின் உத்தரவுகளைக் கேட்டு, அவற்றிற்குக் கீழ்ப்படிந்து நடப்பது அவைகள் மனதுக்கும் ஓரளவு மகிழ்ச்சி தருவதாக இருந்தது; பெருமையாகவும் இருந்தது. புது ஏற்பாடுகூட நல்ல ஏற்பாடுதான் என்று நினைக்க அவைகளைத் தூண்டியது. இரண்டுகால் மனிதன் நாலுகால் விலங்குகளுக்குக் கீழ்ப்பணிந்து நடந்தது ஆனந்தம் தரும் காட்சியாகத்தான் மற்ற விலங்குகளுக்குப்பட்டது. இப்போது மனிதர்களுடன் விலங்குகளின் உறவு முன்பிருந்ததைப் போல இல்லை; நிலைமை மாறிவிட்டது. அது சேமநலப் பாதையில் முன்னேறிக் கொண்டிருந்தது என்பதற்காக, விலங்குப் பண்ணையை மனிதர்கள் குறைசொல்லாமலோ, கேலிசெய்யாமலோ, வெறுக்கா மலோ இல்லை. முன்பு வெறுத்ததைவிட இப்போது அதை அதிகமாக வெறுத்தார்கள் என்றே சொல்ல வேண்டும். இன்றோ, நாளையோ, கூடிய சீக்கிரத்தில் ஒருநாள் விலங்குப் பண்ணை கவிழ்ந்து அழிந்துவிடும் என்றுதான் மனிதர்களில் ஒவ்வொரு வனும் நம்பினான். அப்படி நம்பவேண்டியதுதான் தங்கள் தருமம் என்று அவர்கள் எண்ணினார்கள். காற்றாடி இயந்திர முயற்சி ஒருக்காலும் பலிக்கப்போவதில்லை என்பது அவர்களுக்குத் தெளிவாகவே தெரிந்தது. மதுக்கடைகளிலும் சத்திரஞ் சாவடிகளிலும் சந்திக்கும்போது, பேனாவும் பென்சிலும் பேப்பருமாகக் கோடுகள் போட்டு வரைந்து காட்டிட, காற்றாடி இயந்திரம் சாய்ந்துவிடும் என்பதை, மீண்டும் ஒருதரம் ஒருவருக்கொருவர் மெய்ப்பித்துக் கொள்வார்கள். சாயாமல்

நிமிர்ந்து நின்றாலும்கூட தன் வேலையை அது செய்யாது என்று தலையை ஆட்டிக்கொண்டே சொல் வார்கள். இருந்தாலும், மிருகங்கள் தங்கள் அலுவல்களைக் கவனித்துக்கொண்டு முன்னேறியது பற்றி அவர்கள் ஒரு நல்ல அபிப்பிராயம் கொள்ளாமலிருக்க முடியவில்லை. மிகவும் சிறப்பான முறையில் விலங்குகள் சுறுசுறுப்பாக, பயன் தருகிற மாதிரிக் காரியங்களை செய்கின்றன என்று ஏற்றுக்கொண்டு, மனிதர்களும் அந்த விலங்குப் பண்ணை மிருகங்களுக்கு மரியாதை தரத் தயாராகவே இருக்கவேண்டியதாக இருந்தது. இன்னமும் அதை பெரிய பண்ணை என்று சொல்லாமல், அதற்குரிய பெயரான விலங்குப் பண்ணை என்கிற பெயரிட்டு அழைத்ததையே, இந்த மரியாதைக்கு ஒரு சான்றாகச் சொல்லலாம். ஜோன்ஸைப் பாராட்டி, அவனுக்கு உதவுவதாக வீம்பு கூறுவதையும் மனிதர்கள் நாளடைவில் விட்டுவிட்டார்கள். தன் பண்ணை இனித் தன் கைக்கு வராது என்கிற தீர்மானத்துடன் ஜோன்ஸ் அந்தப் பிராந்தியத்தைவிட்டு வேறு இடத்துக்குப் போய்க் குடியேறி விட்டான். விம்பர் மூலமாக ஏற்பட்டதைத் தவிர, வெளி உலகத்துக்கும் விலங்குப் பண்ணைக்கும் நேரடியான தொடர்புகள் ஒன்றும் இல்லை இன்னமும். ஆனால், நெப்போலியன், பாக்ஸ்வுட் பண்ணை சொந்தக்காரரான பில்கிங்டனுடனோ அல்லது பிஞ்ச்ஃபீல்டு முதலாளியான ஃபிரடெரிக்குடனோ உடனடியாக வியாபார ஒப்பந்தம் ஒன்று செய்துகொள்ளப் போகிறது என்கிற வதந்தி மட்டும் எழுந்து எழுந்து அடிக்கடி அடங்கிக்கொண்டிருந்தது. இந்த இருவரில் ஒருவருடன் மட்டுந் தான் நெப்போலியன் உடன்படிக்கை செய்துகொள்ளும் என்பது தீவிரமாக வற்புறுத்தப்பட்டு வந்தது. ஒரே சமயத்தில் இருவருடனும் ஒப்பந்தம் செய்து கொள்வத இல்லை நெப்போலிய�
சற்றேறக்குறைய இதே சமயத்தில் பன்றிகள் திடீரென்று பண்ணை வீட்டுக்குள் குடியேறின. ஆரம்ப காலத்தில் பண்ணை வீட்டில் குடியிருப்பது பற்றி ஒரு தீர்மானம்

நிறைவேற்றியதாக விலங்குகளுக்கு லேசான ஒரு ஞாபகம் இருந்தது. மீண்டும் ஸ்க்வீலர் எத்தனையோ சமாதானங்கள் கூறி, அப்படியெல்லாம் ஒன்றுமில்லையே என்று ஸ்தாபித்துவிட்டது. பண்ணையின் அஸ்திவாரமாக விளங்கும் பன்றிகள் அமைதியான ஒரு இடத்தில் தான் தங்கள் வேலைகளைச் சரிவரக் கவனிக்க முடியும் என்றது ஸ்க்வீலர். இப்போதெல்லாம் நெப்போலியனைப் பெயர் சொல்லிக் குறிப்பதில்லை அது. தலைவர் என்றுதான் குறிப்பிடும். தலைவரின் கௌரவத்துக்கு ஏற்றது அந்த வீட்டில் வசிப்பது தான்; பன்றிக் கொட்டிலில் தலைவர் அடைபட்டுக் கிடந்தால், அது பண்ணையின் கௌரவத்துக்கே இழுக்கான காரியம் அல்லவா? இப்படியெல்லாம் ஸ்க்வீலர் பேசியும் மிருகங்கள் சிலவற்றிற்கு அதிருப்தியாகத்தான் இருந்தது. பன்றிகள் சமையல் அறையில் சாப்பிட்டன என்பது மட்டுமின்றி, படுக்கை அறைகளில் படுத்து உறங்கின என்று அறிந்தபோது விலங்குகளுக்கு மன நிம்மதியில்லாமல் போயிற்று. பாக்ஸர் வழக்கம் போல, “நெப்போலியன் செய்வதே சரி” என்று சொல்லி விவாதத்தை முடித்துவிட்டது. ஆனால், புரட்சி காலத்திய விதி ஒன்று, விலங்குகள் படுக்கையில் படுத்துறங்குவதைத் தடுத்ததாக க்ளோவருக்கு ஞாபகம் இருந்தது. கொட்டகையின் கோடிச் சுவரில் எழுதியிருந்த ஏழு விதிகளையும் போய்ப் பார்த்தது. பாவம், அதற்குத் தனித்தனி எழுத்துக்களைத் தவிர வேறு எதையும் படிக்க வரவில்லை. முரியலை அழைத்து வந்து விதிகளைப் படிக்கச் சொல்லிற்று.

“முரியல்! நீ அந்த நாலாவது விதியைப் படி. படுக்கையில் படுத்துறங்குவது பற்றி அதில் என்ன சொல்லியிருக்கிறது” என்றது.

மிகவும் சிரமப்பட்டு முரியல் எழுத்து கூட்டிப் படித்தது.

“விதி சொல்கிறது: ‘விரிப்பு விரித்த படுக்கையில் மிருகங்கள் படுத்து உறங்கக்கூடாது’ என்று” வாசித்தது முரியல்.

விரிப்புகளைப் பற்றி புரட்சி காலத்திய விதிகளில் எதுவும்

இருந்ததாக க்ளோவருக்கு ஞாபகமேயில்லை என்பது உண்மை தான். ஆனால், நாலாவது விதிதான் தெளிவாக எழுதியிருக் கிறதே! அதில் தவறு என்ன இருக்கக்கூடும்? இரண்டு வேட்டை நாய்களுடன் அந்த சமயம் எதிர்பாராத விதமாக அங்கு வந்து சேர்ந்த ஸ்க்வீலர், கொஞ்சநஞ்சம் இருந்த சந்தேகத்தையும் தீர்த்துக் கட்டிவிட முற்பட்டது.

அது சொல்லிற்று: "தோழர்களே! நாங்கள் வீட்டில் படுக்கையில் படுத்துறங்குகிறோம் என்று கேள்விப்பட்டீர்களா? அது உண்மைதான். ஏன் கூடாது? படுக்கைகளைப் பற்றி புரட்சி விதிகள் தடுப்பானேன்? படுத்து உறங்குமிடமெல்லாம் படுக்கை தான். ஒரு வைக்கோல் போரும், மாட்டுக் கொட்டில் அடைப்பும் படுக்கைதான். மனிதர்கள் உபயோகிக்கும் விரிப்புகளை மிருகங் களாகிய நாம் உபயோகிக்கக்கூடாது என்பதுதான் விதியின் சாரம். பண்ணை வீட்டுப் படுக்கையிலிருந்த விரிப்புகளை யெல்லாம் அகற்றிவிட்டோம் நாங்கள். கம்பளிகளை மட்டும் உபயோகிக்கிறோம். சௌகரியமான படுக்கைகள் அவை என்று நான் சொன்னால் நீங்கள் நம்பலாம். மூளை வேலை செய்யும் பன்றிகளாகிய எங்களுக்கு இந்தச் சொற்ப சௌகரியங்கள்கூட இல்லாவிட்டால் பண்ணைக் காரியங்கள் எப்படி தடையின்றி நடக்கும்? செவ்வனே நடக்கும்? அதுவும் இப்போது மிகவும் சிரமமான காலத்தில் எங்கள் மூளைக்கு வேலை அதிகரித்துக் கொண்டிருக்கிறதே தவிர, குறையவில்லை. எங்கள் தூக்கத்தைக் கெடுக்க விரும்புகிறீர்களா நீங்கள்? தோழர்களே, சொல்லுங்கள். நாங்கள் சரியாகத் தூங்காமல், வேலை நேரத்தில் அயர்ந்து தூங்கிவிட்டால் என்ன ஆகும்? ஜோன்ஸ் திரும்பி வந்துவிடுவதை நீங்கள் விரும்புகிறீர்களா என்ன?"

உடனே இந்த விஷயத்தில் ஒருமனதாகத் தங்கள் அபிப் பிராயத்தைத் தெரிவித்தன மிருகங்கள் எல்லாம். அதற்குப் பிறகு பன்றிகள் படுக்கைகளில் படுத்துறங்குவதுபற்றி எந்த

விலங்குகளும் எதுவும் பேசவில்லை. இதற்குப் பிறகு சில நாட்கள் கழிந்து காலை நேரங்களில் பன்றிகள் காலதாமதமாக எழுந்து வருகின்றன என்று பார்த்த பிறகுங்கூட விலங்குகள் எதுவும் சொல்லவில்லை. மூளை வேலை செய்பவை ஒருமணி நேரம் அதிகமாகத் தூங்குவது பற்றி எந்த மிருகமும் குறைசொல்ல முன்வரவில்லை.

இலையுதிர்க்காலம் வந்தபோது மிருகங்களுக்கு வேலை செய்து செய்து களைப்பாகத்தான் இருந்தது. ஆனால், அவை உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் இருந்தன. சிரமமான வருஷம் தான். வைக்கோலும் தானியமும் பாதிப்பாதி விற்றாகிவிட்டது என்பதனால், மாரிக்காலத்துப் போதுமான உணவு இல்லை தான்; ஆனால், காற்றாடி இயந்திரம் உருவாகிக் கொண்டிருந்தது. அது ஒன்றே போதும், மற்ற சிரமங்களையெல்லாம் சரிக்கட்ட. காற்றாடி இயந்திரம் அமைப்பதில் அநேகமாகப் பாதி வேலை யாகிவிட்டது. அறுவடைக்குப் பின், பல நாட்கள் கிடைத்தன மிருகங்களுக்கு. மிகவும் சுறுசுறுப்பாக, எப்போதையும்விட அதிகமாக முனைந்து வேலை செய்தன அவையெல்லாம். ஒரு அடி உயரம் காற்றாடி இயந்திரச் சுவரை எழுப்ப எல்லா மிருகங்களும் இரண்டு நாட்கள் பாடுபட்டன. இந்த உழைப் பெல்லாம் வீண்போகாது என்கிற திட சித்தத்துடன் பாடுபட்டன. இரவு நேரத்தில் சந்திரன் ஒளியில் பாக்ஸர் சிலசமயம் தானாகச் சில சிரமமான காரியங்களைச் செய்துமுடிக்கும். ஓய்வு கிடைத்த நேரத்தில், கட்டிக்கொண்டிருந்த சுவர்களைச் சுற்றிவந்து கூத்தாடிக் களியாட்டம் ஆடின விலங்குகள் எனலாம். சுவர்கள் உறுதி யாகவும், நேராகவும் நிமிர்ந்து நிற்பதைப் பார்த்துப் பார்த்து ஆனந்தப்படும். இப்படிப்பட்ட அதிசயத்தைத் தங்களால்

எப்படிச் சாதிக்க முடிந்தது என்று ஆச்சரியப்படும்! கிழட்டு பெஞ்சமின் மட்டும்தான் காற்றாடி இயந்திரம் பற்றி உற்சாகமோ, ஆனந்தமோ கொள்ள மறுத்தது. ஆனால், வழக்கம்போல அது எதுவும் சொல்வதில்லை. கழுதைகள் நீண்டகாலம் வசிக்கின்றன என்கிற புதிர் வாக்கியத்தைத் தவிர வேறு எதையும் அது சொல்ல வில்லை.

நவம்பர் மாதம் வந்தது. தென்மேற்குப் பருவக்காற்று கடுமையாக வீசிற்று. அதனால் காற்றாடி இயந்திரக் கட்டிட வேலை நின்றுவிட்டது. ஒருநாள் இரவு புயல் மிகவும் பலமாக வீசியது. காற்று அடித்த வேகத்தில் பண்ணைக் கட்டிடங்களே அடியோடு பெயர்ந்து விழுந்துவிடும்போல ஆடின. கூரைமேல் இருந்த பல ஓடுகள் காற்றிலே பறந்து போய்விட்டன. கோழிகள் கூச்சலிட்டுக் கொண்டு எழுந்து அங்குமிங்கும் ஓடின. தூரத்தில் எங்கேயோ ஒரு துப்பாக்கி வெடிச்சத்தம் கேட்டது என்று எல்லா மிருகங்களும் ஒரே சமயத்தில் கனவு கண்டு விழித்துக் கொண்டு நடுங்கின. காலையில் எழுந்துவந்து பார்த்தபோது கொடிமரம் சாய்ந்து கிடந்தது. ஒரு பெரிய, பழைய வேப்ப மரம் வேரோடு சாய்ந்துவிட்டது. காற்று அதைக் கிழங்கைப் பிடுங்குவது போலப் பிடுங்கிப் போட்டுவிட்டது. இதைக் கவனித்தவுடனேயே எல்லா மிருகங்களும் அடுத்த பக்கமாகத் திரும்பிப் பார்த்தன. அப்போது அதிபயங்கரமான காட்சி ஒன்றை அவைகள் கண்டன. காற்றாடி இயந்திரம் அடியோடு நாசமாகிவிட்டது.

பதட்டத்துடன் விலங்குகள் ஓடிப்போய்ப் பார்த்தன. இப்போதெல்லாம் நிதானமாக அடிமேல் அடிவைத்து நடந்து செல்லப் பழகிக்கொண்டிருந்த நெப்போலியன் கூட அதிவேகமாக ஓடி காற்றாடி இயந்திரத்தருகே சென்றது. ஆம், அது சாய்ந்து கிடந்தது! விலங்குகள் பட்ட சிரமமெல்லாம்

அடியோடு வியர்த்த மாகிவிட்டது. தரைமட்டமாகிவிட்டது. அவை எவ்வளவு சிரமப் பட்டு எழுப்பிய கட்டிடம். அரும்பாடுபட்டு சேர்த்து அடுக்கிய கற்கள் நாலாபக்கமும் சிதறிக்கிடந்தன. முதலில் அவைகளால் ஒரு வார்த்தைகூட பேசமுடியவில்லை. துயரம் தொண்டையை அடைக்க, சிதறிக் கிடந்த கற்களைப் பார்த்துக் கொண்டு நின்றன. நெப்போலியனும் மௌனமாகக் குறுக்கும் நெடுக்குமாக நடந்தது. அடிக்கடி பூமியை முகர்ந்து பார்த்தது. அதன் வால் விரைத்துக் கொண்டு நின்றபடி அங்குமிங்கும் அலைந்தது. அது மிகவும் தீவிரமான யோசனையில் ஆழ்ந்திருந்தது என்பதற்கு அந்த வாலின் நிலைதான் அறிகுறி என்பது மிருகங்களுக்குத் தெரியும். திடீரென்று நின்று, ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டதுபோல நிமிர்ந்து பார்த்தது நெப்போலியன்.

அமைதியாக அது பேசத் தொடங்கிற்று. “தோழர்களே! இதற்குக் காரணம் யாரென்று தெரியுமா, உங்களுக்கு? இரவில் ரகசியமாக வந்து, நமது காற்றாடி இயந்திரத்தைக் கவிழ்த்த விரோதி யார் என்று தெரியுமா, உங்களுக்கு?” இடி போன்ற குரலில் அந்த விரோதியின் பெயரைச் சொல்லியது நெப்போலியன். ஸ்நோபால்! ஸ்நோபால்தான் இதற்கு மூலகாரணம். ஸ்நோபால் தான் நம்மேலுள்ள விரோதத்தால் இதைச் செய்திருக்கிறது. தீங்கு செய்வது என்கிற எண்ணத்துடன், நமது திட்டங்களைப் பாழாக்கும் உத்தேசத்துடன், தனக்கு நேர்ந்த நாடு கடத்தலுக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் ஒரே நோக்கத்துடன், நமது விரோதி, நாட்டின் எதிரி இதைச் செய்திருக்கிறது. ஒரு வருஷத்து வேலையை ஒரு இரவிலே வந்து வீணாக்கிவிட்டது!

தோழர்களே! ஸ்நோபாலுக்கு நான் இப்போது மரண தண்டனை விதிக்கிறேன். எந்த மிருகம் அதைக் கொன்று வீழ்த்துகிறதோ அதற்கு "விலங்கு வீரன்" இரண்டாம் தரப் பட்டமும், ஆறு ஆப்பிள்களும் தருவேன். ஸ்நோபாலை உயிருடன் பிடித்துக் கொணர்ந்து என்னிடம் விடுகிறவர்களுக்கு பத்து ஆப்பிள்களும் இனாமும் அளிக்கப் படும் என்பதை இதனால் சகல விலங்குகளும் அறியவும்."

மிருகங்கள் ஸ்தம்பித்துவிட்டன. ஸ்நோபால்கூட இப்படிப் பட்ட தீச்செயலைச் செய்திருக்க முடியுமா என்று அவைகளுக்குச் சந்தேகமாக இருந்தது. இருந்தாலும் எல்லா மிருகங்களும் கோபமாக ஆரவாரித்தன. உடனே, ஸ்நோபால் திரும்பி வந்தால் அதைப்பிடிக்க என்னென்ன வழிகளைக் கையாளலாம் என்று விலங்குகள் எல்லாம் சிந்திக்கத் தலைப்பட்டன. பின்னர் தரையில் ஒரு பன்றியின் காலடிச் சுவடுகள் கண்டுபிடிக்கப் பட்டன. காற்றாடி இயந்திரம் இருந்த பக்கத்தில் பல அடி தூரம் தெரிந்த சுவடிகள் வேலியில் ஒரு பொந்து வரை போவது போல இருந்தது. நெப்போலியன் அந்தச் சுவடுகளை முகர்ந்து பார்த்து விட்டு அவை ஸ்நோபாலின் காலடிச்சுவடுகள்தான் என்று சொல்லிற்று. ஸ்நோபால் பாக்ஸ்வுட் பண்ணை பக்கமாக வந்து, விலங்குப் பண்ணையில் புகுந்து, அழிக்கும் வேலையில் ஈடு பட்டிருக்கலாம் என்று அபிப்பிராயப்பட்டது நெப்போலியன்.

"தாமதம் வேண்டாம் தோழர்களே!" என்று கூறியது நெப்போலியன். தொடர்ந்து அது பேசியது: "செய்வதற்கு வேலை கிடக்கிறது. காற்றாடியை மீண்டும் நிர்மாணிக்க இன்றே வேலை செய்யத் தொடங்குவோம், மழையோ, பனியோ, வெய்யிலோ எதையும் பொருட்படுத்தாமல், ஆக்க வேலையில் ஈடுபடுவோம். நமது வேலையை அவ்வளவு சுலபமாக அழித்தொழித்துவிட முடியாது என்று இந்தத் துரோகிக்குத் தெளிவாக்க வேண்டியது அவசியம்! ஞாபகமிருக்கட்டும் தோழர்களே! நமது திட்டங்களில்

எள்ளளவும் மாறுதல் கிடையாது. ஒன்றுக்கு நாலாகப் பாடு பட்டுத் திட்டங்களை நிறைவேற்றுவோம். முன்னேறுங்கள், தோழர்களே! காற்றாடி இயந்திரம் நீடூழி வாழட்டும்! விலங்குப் பண்ணை வாழ்க!"

ாக

# 7

மிகவும் கடுமையான மழைக் காலம் வந்தது . அந்த வருடப் புயல் காற்றுகளைத் தொடர்நது பனிக் காற்றும் பனியும் வந்தன . அவற்றைத் தொடர்ந்து , பூமியில் உறைந்த பனி பிப்ரவரி மாதம் வரையில் உடையவே யில்லை . காற்றாடி நிர்மாண வேலையை இந்த நிலையில் எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் , எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாக , விலங்குகள் சிரமத் தையும் பாராட்டாமல் செய்து வந்தன . வெளி உலகம் தங்களைக் கவனித்துக் கொண்டிருக் கிறது என்கிற ஞாபகத்துடன் அவை வேலை செய்தன . காற்றாடி இயந்திரம் குறித்த காலத்தில் கட்டிமுடிக்காவிட்டால் பொறாமைபிடித்த மனிதர்கள் சந்தோசப்படுவார்கள் என்பதை உணர்ந்து மிருகங்கள் அரும்பாடுபட்டன .

அனுதாபமும் பொறாமையின்மையும் காரண மாக வெளி உலகத்து மனிதர்கள், காற்றாடி இயந்திரக் கட்டிடத்தைத் தரைமட்டமாக்கியது ஸ்நோபாலல்ல என்று சொன்னார்கள். ஸ்நோபால் சதி செய்ததாக நெப்போலியன் சொன்னதை அவர்கள் நம்பத் தயாராக இல்லை. சுவர்கள் பலமாக இல்லாத தால், காற்றினால் கட்டிடம் தானாகவே சரிந்துவிட்டது என்றார்கள். இது உண்மையல்ல என்று மிருகங்களுக்குத் தெரியும். இருந்தும் இந்தத் தடவை சுவர்களை பழையபடி ஒன்றரை அடிக்குப் பதிலாக மூன்றடிக் கனத்துடன் எழுப்புவது என்று தீர்மானித்தன விலங்குகள். முன்னைவிட அதிகமான கற்கள் இதற்குத் தேவைப் பட்டன. பலநாட்கள் வரை கல்வெட்டும் இடத்திலே பனி படர்ந்துகிடந்தபடியால் கற்களை எடுக்க முடியவில்லை; எடுத்த கற்களையும் உடைக்க முடியவில்லை. பனி போன பிறகும், கடும் மாரியில் அங்கு வேலை செய்வது கடினமாகத்தான் இருந்தது. முன்னிருந்ததுபோல நம்பிக்கையும் மிருகங்களுக்கு அற்றுப் போய்விட்ட மாதிரி இருந்தது. குளிர் என்பது மட்டுமல்ல, தினமும் பட்டினி கிடக்கவேண்டிய அவசியமும் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. பாஸ்கரும் க்ளோவரும் மட்டுமே எதற்கும் அஞ்சாமல், நம்பிக்கை இழக்காமல் இருந்தன என்று சொல்லவேண்டும். சேவை,

உழைப்பு என்பதெல்லாம் பற்றி ஸ்க்வீலர் பன்றி உற்சாகமாகப் பிரசங்கங்கள் பல செய்தது. ஆனால், இந்தப் பிரசங்கங்களை விட பாக்ஸரின் உதாரணமும், பலமும், தவறாமல் அது சொன்ன 'நான் இன்னும் அதிகமாக உழைக்க முயலுவேன்' என்கிற ஸ்லோகமும் மிருகங்களுக்கு ஊக்கமளித்தன என்றே சொல்ல வேண்டும்.

ஜனவரி மாதத்தில் உணவு பற்றாக்குறையாகி விட்டது. தானியம் சோர்வு தருகின்ற அளவுக்கும் குறைந்துவிட்டது. தானியத்துக்குப் பதிலாக, கொஞ்சம் உருளைக்கிழங்கு அதிகப் படியாகத் தரப்படும் என்று அறிவிக்கப்பட்டது. பிறகு கிழங்கும் சரிவர விளையவில்லை என்று தெரிந்தது; பனியில் வீணாகி விட்டன உருளைக் கிழங்குகள். தேவைப்படும் கிழங்குகளில் மூன்றில் ஒரு பங்குதான் இருப்பில் இருந்தன. மற்றவை யெல்லாம் வெம்பிக் கறுத்துவிட்டன. பல நாட்கள் உமியையும் பொட்டையும் தவிர வேறு எதுவும் மிருகங்களுக்கு உணவாகக் கிடைக்கவில்லை. பட்டினியும் பஞ்சமும் வந்துவிட்டது போல இருந்தது.

வெளி உலகத்துக்கு இது தெரியாமல் மறைத்து வைக்க வேண்டியது அவசியமாக இருந்தது. ஏற்கனவே காற்றாடி இயந்திரக் கட்டிடம் சரிந்ததால் தெம்பூட்டப்பட்டவர்களாக, மனிதர்கள் விலங்குப் பண்ணையைப் பற்றி ஏராளமான சரடுகளைத் திரித்துக்கொண்டிருந்தார்கள். இந்த நிலையில் பஞ்சம் என்கின்ற உண்மையும் அவர்களுக்குத் தெரியவந்தால் என்னதான் சொல்வார்களோ? மிருகங்கள் தின்பதற்கு உணவு கிடைக்காமல் பட்டினி கிடக்கின்றன என்றும், தீராத வியாதியால் அவதியுறுகின்றன என்றும், ஓயாமல் ஒன்றோடொன்று சண்டை போட்டுக்கொள்கின்றன என்றும், ஒன்றையொன்று அடித்துத் தின்கின்றன என்றும் மனிதர்கள் தங்கள் சுயநலம் கருதி, விலங்குப் பண்ணையைப் பற்றி ஏராளமான அவதூறுகளைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தார்கள். உணவுப் பற்றாக்குறை வந்துவிட்டது என்று அறிந்தால், அவர்கள் இன்னும் என்னென்ன சொல்வார்களோ? நெப்போலியன் இதற்கும் ஏற்பாடு செய்தது. உண்மை நிலை வெளியே தெரியாதிருப்பதற்காக விம்பரைப் பிரச்சாரத்துக்கு உபயோகித்துக் கொள்வது என்று தீர்மானித்தது. நாட்டிலே விலங்குப் பண்ணை பற்றி நல்ல அபிப்பிராயத்தைப் பரப்பிவிட அந்த வக்கீலை உபயோகித்துக் கொள்ளத் தீர்மானித்தது நெப்போலியன். வாரா வாரம், திங்கட்கிழமை அன்று விம்பர் வரும்போது, மிருகங்கள் அந்த மனிதர் கண்ணிலேயே படாமல் ஒதுங்கிப் போய்க் கொண்டிருந்தன. இப்போது சில விலங்குகள், முக்கியமாக

ஆடுகள் மட்டும், விம்பர் முன் எதிர்ப்பட்டன. உணவு அதிகமான அளவு தரப்படுவதாக விம்பர் காதில் விழும் படியாக, ஆனால், தங்களுக்குள்ளாகவே அந்த ஆடுகள் பேசிக் கொள்ளவேண்டும் என்று நெப்போலியன் உத்தரவிட்டது. அதைத் தவிர பண்ணையில் இருந்த களஞ்சியங்களில் உச்சி வரையில் மண்ணைப் போட்டு மேலே இரண்டு அங்குலம் தானியம் பரப்பி வைக்கப்பட்டது. ஏதாவது ஒரு தகுதியான சாக்கை வைத்துக் கொண்டு விம்பர் அந்தக் களஞ்சியங்கள் இருந்த பக்கம் அழைத்துச் செல்லப்பட்டால், களஞ்சியங்களி லெல்லாம் தானியம் நிரம்பியிருப்பதாக எண்ணி ஊரில் சொல்லட்டுமே என்று திட்டமிட்டது நெப்போலியன். விம்பர் ஏமாளிதான். விலங்குப் பண்ணையில் உணவுக்குப் பஞ்சமில்லை என்கிற செய்தி நாளடைவில் ஊரில் வக்கீல் மூலம் நன்கு பரவி விட்டது என்றுதான் சொல்லவேண்டும்.

அப்படியிருந்தும் ஜனவரி மாதக் கடைசிக்குள் மிருகங்கள் உயிர் வாழ்வதற்கே ஏதாவது கொஞ்சம் தானியமாவது, வேறு எந்த உணவாவது வெளியே வாங்கித்தானாக வேண்டும் என்கின்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது. இந்த நாட்களில் அநேகமாக நெப்போலியன் வெளியே காணப்படுவதே கிடையாது. பண்ணை வீட்டுக்குள்ளேயே இருந்துவிட்டது அது. வீட்டின் ஒவ்வொரு கதவையும் வேட்டை நாய்கள் காவல் புரிந்துவந்தன. அவசியம் நேர்ந்தபோது நெப்போலியன் வெளியே கிளம்பினால், ஏதோ ஊர்வலம் கிளம்புவதுபோல இருக்கும். முன்னும் பின்னும் வேட்டை நாய்கள் புடை சூழ்ந்து காவல் காத்துவர அது வெளியே வரும். யாராவது தப்பித் தவறி நெருங்கி வந்துவிட்டால் ஒரே சமயத்தில் சில நாய்களாவது உறுமத் தொடங்கிவிடும். ஞாயிறு அன்று காலையில்கூட நெப்போலியனைக் காணமுடியாது. வேறு யாராவது ஒரு பன்றி மூலம் (அநேகமாக அது ஸ்க்வீலர் பன்றியாகத்தான் இருக்கும்) அடுத்த வாரத்துக்கான தனது உத்தரவுகளை அது மிருகங்களுக்குத் தெரிவித்துவிடும்.

ஒரு ஞாயிறன்று காலையில், பெட்டைக் கோழிகள் இடும் முட்டைகளையெல்லாம் தந்துவிட வேண்டுமென்று ஸ்க்வீலர் பன்றி அறிவித்தது. வாரத்தில் நானூறு முட்டைகள் தருவதாகக் கிராமத்துடன், வக்கீல் விம்பர் மூலம், நெப்போலியன் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தது. இதனால் கிடைக்கும் பணத்தைக் கொண்டு தேவையான தானியமும் உணவும் வாங்க இயலும். அடுத்த அறுவடை வரையிலும் விலங்குகளைக் காப்பாற்றி விடலாம். நிலைம வசதியாக மாறும் வரையில் பெட்டைக் கோழிகள் இடும் முட்டைகளையெல்லாம்

தந்துவிட வேண்டு மென்று அறிவித்தது ஸ்க்வீலர்.

இதைக் கேட்ட பெட்டைக் கோழிகள் பயங்கரமாகக் கூச்சலிட்டன. இந்த மாதிரியான ஒரு தியாகம் செய்ய வேண்டி யிருக்கலாமென்று முன்னரே அவற்றிற்கு அறிவிக்கப்பட்டிருந்தது. இருந்தும் இப்படி ஒருநாள் ஏற்படலாம் என்று அவை நம்பாமலே இருந்துவிட்டன. வசந்தகால முட்டையிடலுக்குத் தயார் செய்து கொண்டிருந்த அவை, முட்டைகளைக் கொடுக்க மறுத்து விட்டன. முட்டைகளை எடுத்து விற்பது கொலைகாரச் செயல் என்றன. ஜோன்ஸை விரட்டியதற்குப் பிறகு இப்பொழுதுதான் முதல் தடவையாக, புரட்சி, கலகம் என்று சொல்லக்கூடிய அளவில் இந்த மாதிரியான சம்பவம் விலங்குப் பண்ணையில் நிகழ்ந்தது. வாலிப, கருப்பு மினோர்க்கா கோழிகள் மூன்றின் தலைமையில், பெட்டைக் கோழிகள் நெப்போலியனின் உத்தரவை எதிர்த்து நிற்கத் தயாராயின; கீழ்படிய மறுத்தன. அவை கூரை உச்சியிலே உத்தரத்தின்மீது உட்கார்ந்துகொண்டு முட்டைகளை இட்டன. முட்டைகள் கீழே விழுந்து உடைந்தன. நெப்போலியன் தயை தாட்சண்யம் காட்டாமல் உடனேயே அவற்றைத் தண்டிக்கத் தொடங்கியது. நெப்போலியன் உத்தரவுப்படி பெட்டைக் கோழி களுக்கு உணவு தருவது நிறுத்தப்பட்டது. பெட்டைக் கோழி களுக்கு ஒரு மணி தானியம் கொடுக்கிற மிருகத்துக்கு மரண தண்டனை விதிக்கப்படுமென்று அறிவிக்கப்பட்டது. இந்த உத்தரவு அமுல் செய்யப்பட்டதா என்று நாய்கள் கண்காணித்துக் கொண்டன. ஐந்து நாட்கள் பெட்டைக் கோழிகள் புரட்சியை நீடித்து நடத்தின. பிறகு பணிந்து தங்கள் குடில்களுக்குள் முட்டையிடத் திரும்பின. இடையில், உணவில்லாமல் ஒன்பது கோழிகள் மரித்துவிட்டன. தோட்டத்தில் அவற்றைப் புதைத்து விட்டு, அவை சாக்கிடியாஸிஸ் என்கிற புது வியாதியால் மரித்த தாக நெப்போலியன் அறிவித்துவிட்டது. இந்தப் புரட்சியைப் பற்றி விம்பர் காதில் எதுவும் விழவில்லை. ஒப்பந்தப்படி முட்டைகள் வக்கீலிடம் தரப்பட்டன. அவற்றை எடுத்துப்போக ஒரு கடைக்காரனின் வண்டி வாரத்துக்கொரு

தரம் விலங்குப் பண்ணைக்கு வந்துபோயிற்று.

இத்தனை காலமும் ஸ்நோபாலைப் பற்றி ஒருவிதமான தகவலும் நிச்சயமாகத் தெரியவில்லை. அண்டையில் இருந்த பண்ணைகளில் ஒன்றில் (அது பாக்ஸ்வுட்டோ, பிஞ்ச்ஃபீல்டோ என்பது நிச்சயமாகத் தெரியவில்லை.) அது ஒளிந்துகொண்டிருப்பதாக ஒரு வதந்தியிருந்தது. முன்னைவிட இப்போது நெப்போலியன் அண்டை அயல் பண்ணைக்காரர்களிடம் சுமூகமான உறவு பூண்டிருந்தது. பத்து வருஷங்களுக்கு முன் ஜோன்ஸ் ஒரு பீச் மரக் காட்டைத் திருத்தி, அந்த மரங்களையெல்லாம் வெட்டி அடுக்கியிருந்தான். மரம் நன்கு வைரமேறி இருந்தது; பதமாக இருந்தது. அந்த மரத்தையெல்லாம் விற்றுவிடலாம் என்று விம்பர் சொன்னதும் நெப்போலியன் அதை விற்கத் தயாரா யிற்று. பில்கிங்டனும், ஃபிரடெரிக்கும் அதை வாங்கிக் கொள்ள அவசரப்பட்டனர். இருவருமே அதற்காகப் போட்டி போட்டனர் என்றே சொல்லலாம். யாருக்கு விற்பது என்று தீர்மானிக்க முடியாமல் நெப்போலியன் தயங்கிக்கொண்டிருந்தது. ஃபிரடெரிக் கிடம் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம் என்கிற அபிப்பிராயம் கொள்ளுகிற போதெல்லாம், ஸ்நோபால் பாக்ஸ்வுட் பண்ணையில் தலைமறைவாக இருப்பதாகப் பேசிக் கொள்ளப்படும். பில் கிங்டனிடம் விற்பது என்று யோசிக்கும் போது, ஸ்நோபால் பிஞ்ச்ஃபீல்டில் தலைமறைவாக இருப்பதாகச் சொல்லப்படும்.

திடீரென்று வசந்தத்தின் ஆரம்பகாலத்தில், திகைக்க வைக்கும் ஒரு ஆச்சரியகரமான விஷயம் கண்டுபிடிக்கப்பட்டது. ஸ்நோபால் இரவில் ரகசியமாக விலங்குப் பண்ணைக்கு வந்து போய்க் கொண்டிருக்கிறது என்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் செய்தியால் கலவரமடைந்த மிருகங்களால் இரவில் படுத்து உறங்கமுடியாமல் போய்விட்டது. இருட்டியவுடன் ஒவ்வொரு இரவும், ஸ்நோபால் பண்ணைக்குள் வந்து விஷமங்கள் பல செய்துவிட்டுப் போனதாகச் சொல்லப்பட்டது. தானியத்தைத் திருடியது; பால் பாத்திரங்களை உருட்டிவிட்டது; முட்டைகளை உடைத்தது; விதை விதைத்திருந்த பாத்திகளை மிதித்து வீணாக்கியது; பழந்தரும் மரங்களின் பட்டைகளை உரித்தெடுத்தது - என்பன ஸ்நோபால் செய்த வேலைதான் என்று சொல்லப்பட்டது. பண்ணையில் எது தவறாக நடந்தாலும் அது ஸ்நோபாலின்

காரியம் என்று சொல்லுவது வழக்கமாகிக் கொண்டிருந்தது. ஜன்னல் கண்ணாடி உடைந்துவிட்டதா? சாக்கடை ஓடாமல் அடைத்துக்கொண்டதா? ஸ்நோபால் இரவில் வந்து தன் விஷமத்தைச் செய்துவிட்டுப் போய்விட்டது என்று ஏதாவது ஒரு மிருகம் சொல்லத் தவறாது. களஞ்சியத்தின் கதவுச் சாவி காணாமற்போனதுபோது, அதைக் கிணற்றுக்குள் ஸ்நோபால் தான் தூக்கியெறிந்திருக்கவேண்டும் என்று சொல்லவும் சில மிருகங்கள் தயங்கவில்லை. இதில் விசேஷம் என்னவென்றால், ஒரு சாக்குக்கடியில் சாவி கண்டு எடுக்கப்பட்ட பின்பும், இதை நம்பத் தயாராக இருந்தன விலங்குகள் என்பதுதான். தூங்கிக் கொண்டிருக்கும்போது இருட்டில் திருட்டுத்தனமாக வந்து தங்கள் பாலை எல்லாம் கறந்து, தரையில் ஊற்றிவிட்டுப் போய்விட்டது ஸ்நோபால் என்று பசுமாடுகள் எல்லாம் ஏக மனதாகக் குற்றம்சாட்டின. மாரிக்காலத்தில் வழக்கத்துக்கு அதிகமாகத் தொந்தரவு தந்த எலிகள் ஸ்நோபாலுடன் நேசமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது.

ஸ்நோபால் பற்றி எல்லா விஷயங்களையும் நன்கு ஆராய்ந்து பூரணமாகக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் புறப்பட்டது நெப்போலியன். நாய்கள் புடைசூழ அது கிளம்பி, பண்ணைக் கட்டிடங்களையும், வயல்களையும், தோட்டங் களையும் துருவித் துருவிப் பார்த்தது. மற்ற மிருகங்கள் எல்லாம் சற்றுப் பின்னால் மரியாதையாக வந்தன. சில அடிகளுக்கொரு தரம் நின்று நெப்போலியன் தரையை மூக்கால் முகர்ந்தது. ஸ்நோபாலின் காலடிச் சுவடுகளைப் பின்பற்றி அங்கு மிங்கும் சென்றது. அந்தச் சுவடுகளிலே ஸ்நோபாலின் நாற்றம் அடிக்கிறது என்றது அது. மூலை முடுக்கு விடாமல் முகர்ந்து பார்த்தது. களஞ்சியம், கொட்டகை, மாட்டுக் கொட்டில், கோழிக் குடில்கள், காய்கறித் தோட்டம் எங்குமே ஸ்நோபாலின் காலடிச் சுவடுகள் இருப்பதைக் கண்டுபிடித்துச் சொல்லியது நெப்போலியன். தரையை மூக்கால் தேய்த்துக்கொண்டு, உறுமி உறுமி மூச்சை இழுத்துவிட்டு, “அந்த அயோக்கியன் ஸ்நோபால், இதோ இங்கே வந்துபோயிருக்கிறான்” என்று முணுமுணுக்கும் நெப்போலியன். பிறகு சிறிதுநேரம் கழித்து “இங்கேயும் வந்து போயிருக்கிறான்” என்றும் சொல்லும். “தெளிவாகவே வீசுகிறது அதன் வாடை?” என்றும் சொல்லும். ஸ்நோபால் என்கிற பெயரைக் கேட்ட வுடனேயே நாய்கள் எல்லாம் ரத்தம் உறையும் படியாக உறுமும். பற்கள் தெரிய வாயைப் பிளக்கும்; குரைக்கும்.

மற்ற விலங்குகளெல்லாம் அளவுகடந்த பீதியடைந்தன. ஸ்நோபால் என்கின்ற, கண்ணுக்குத் தெரியாத ஒரு பிசாசு தங்களையெல்லாம்

பிடித்து ஆட்டிவைக்கிறது என்கிற அசைக்க முடியாத எண்ணம் அவற்றிற்கு ஏற்பட்டுவிட்டது. காற்றிலேயே கலந்து நின்றது ஸ்நோபால் என்கிற தீய உருவம். மிருகங்களுக்கு எத்தனையோ தீமைகளை விளைவிக்கக் காத்திருந்தது அது! இந்த நிலையில், மாலையில் ஸ்க்வீலர் பன்றி விலங்குகளை அழைத்து ஒரு கூட்டம் போட்டது. முகத்திலே ஒரு பயத் தோற்றத்துடன், முக்கியமான விஷயம் ஒன்று சொல்ல இருக்கிறது என்று மிருகங்களுக்கு அறிவித்தது.

“தோழர்களே!” என்று கத்திற்று ஸ்க்வீலர். மேலும் கீழும் பக்கத்திலும் குதித்துக் குதித்து நின்று வாலை ஆட்டிக் கொண்டே, “மிகவும் பயங்கரமான விஷயம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. ஸ்நோபால் என்கிற துரோகியை பிஞ்ச்பீல்ட் முதலாளி ஃபிரடெரிக் விலைகொடுத்து வாங்கிவிட்டான். அவன் உதவியுடன் நம்மைத் தாக்கி, நம் பண்ணையைப் பிடுங்க ஸ்நோபால் சதி செய்து கொண்டிருக்கிறது. ஃபிரடெரிக் நம் மீது படையெடுக்கும்போது அவனுக்கு வழிகாட்டவும் யுக்திகள் சொல்லித் தரவும் ஸ்நோபால் சம்மதித்துவிட்டது. ஆனால், அதையும்விட மோசமான செய்தி ஒன்றும் இப்போது நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதாக இருக்கிறது. ஸ்நோபாலின் துரோகம் அதனுடைய பேராசை யாலும், கர்வத்தாலும் உண்டாயிற்று என்று நாம் இதுகாறும் எண்ணியிருந்தோம். அதன் துரோகத்துக்கு வேறு காரணங்கள் இல்லை என்று எண்ணினோம். அப்படி நாம் நினைத்தது தவறு தோழர்களே! அதன் துரோகத்துக்கு முக்கிய காரணம் என்ன தெரியுமா? ஆரம்பமுதலே ஸ்நோபால் ரகசியமாக ஜோன்ஸின் கட்சியைத் தான் ஆதரித்து வந்திருக்கிறது. எப்போதுமே அது ஜோன்ஸின் ரகசிய ஒற்றனாகவும் பிரதிநிதியாகவுந்தான் இருந்து வந்திருக்கிறது. அது விட்டுச்சென்ற ரகசியக் கடிதங்கள் மூலம் இதெல்லாம் இப்போது தெரிய வந்துவிட்டது. இப்போதுதான் அந்தக் கடிதங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இந்த கடிதங்கள் ஸ்நோபால் நடத்தையில் பல விஷயங்களை நமக்குத் தெளி வாக்குகிறது என்றுதான் சொல்லவேண்டும். நாமே கண்கொண்டு பார்க்கவில்லையா? மாட்டுக் கொட்டில் சண்டையிலே நம்மைத் தோல்வியடையச் செய்ய ஸ்நோபால் செய்த முயற்சிகளை நாமே கண்கொண்டு பார்க்கவில்லையா? நல்லவேளையாக அதன் முயற்சிகள் பலிக்கவில்லை!”

மிருகங்களெல்லாம் பிரமித்து நின்றன. ஸ்நோபால் காற்றாடி இயந்திரத்தை அழித்ததையும் விடப் பெரிய துரோகம் இது! ஆனால், இதைப் பூரணமாகத் தெரிந்துகொள்ள அந்த மிருகங் களுக்குக் கொஞ்சநேரம் பிடித்தது. அவற்றிற்கெல்லாம் ஞாபக

மிருந்தோ அல்லது ஞாபகமிருந்ததாக நினைவு மட்டும்தான் இருந்ததோ? மாட்டுக்கொட்டில் யுத்தத்திலே ஸ்நோபால்தானே யுத்த வரிசையில் முதலில் நின்று, மற்ற மிருகங்களுக்கெல்லாம் முன்னால் போய் மனிதர்களைத் தாக்கிற்று. ஒவ்வொரு தடவையும் மற்ற மிருகங்களை ஊக்கி, உற்சாகமூட்டி, மேலும் தூண்டிப் போரிடத் தைரியம் தந்தது ஸ்நோபால்தானே? ஜோன்ஸின் துப்பாக்கிக் குண்டுகள் முதுகில்தைத்த போதும் பின்வாங்காமல், பாய்ந்து தாக்கியது அதே ஸ்நோபால்தானே? ஜோன்ஸுடன் ரகசிய சதி செய்தது என்பது உண்மையானால், இதற்கெல்லாம் எப்படி அர்த்தம் கற்பிப்பது? இது சரியல்லவே! கேள்விகள் அதிகம் கேட்காமல் எதையும் நம்பத் தயாராக இருந்த பாக்ஸருக்குங்கூட இது பெரும் புதிராகத்தான் இருந்தது. முன்னங்கால்களை மடக்கிக்கொண்டு படுத்தது பாக்ஸர். கண்களை மூடிக்கொண்டு சிறிதுநேரம் சிந்தித்தது. தன் சிந்தனைகளுக்கு வார்த்தை உருக்கொடுக்கச் சிரமப்பட்டு பேச முயன்றது.

அது சொல்லிற்று. "இதை நம்ப நான் தயாராக இல்லை. மாட்டுக்கொட்டில் சண்டையில் ஸ்நோபால் வெகு தைரியத் துடன் வீரப்போர் செய்தது. அதை நானே பார்த்தேன், என் கண்ணால். 'விலங்கு வீரன் முதல் வரிசை' என்கிற மெடலை நாம் அதற்குத் தரவில்லையா? யுத்தத்துக்குப் பிறகு, உடனே நடந்த விஷயம் அது!"

'அதுதான் நாம் செய்த முதல்பிசகு. தோழரே' என்றது ஸ்க்வீலர், "நாங்கள் கண்டெடுத்த ரகசியக் கடிதங்களில் முழுச் சதியும் தக்க தகவல்களுடன் எழுதப்பட்டிருக்கிறது. நம்மை ஒழித்துவிடவே அது நம்மைத்தூண்டி அன்று சண்டையிட வைத்தது." ஸ்க்வீலர் கூறியது.

"ஆனால், அதற்குக் காயம் ஏற்பட்டதே! அதன் ரத்தம் தரையில் சிவப்பாகத் தெரிந்ததே" என்றது பாக்ஸர்.

"அதெல்லாம் முன்கூட்டியே ஏற்பாடு செய்துகொண்டு நடித்துக்காட்டிய ஒரு நாடகம்" என்றது ஸ்க்வீலர். "ஜோன்ஸி னுடைய துப்பாக்கிக் குண்டுகளால் அதன்மேல் சுட்டும் ஏன் அதிக காயம் ஏற்படவில்லை? 'நான் சுடுகிறார்போல சுடுகிறேன்' என்று ஜோன்ஸ் முன்கூட்டியே செய்துகொண்ட ஏற்பாடுகள் தான் அது. இதெல்லாம் முன்னேற்பாட்டின்படிச் செய்து கொண்ட நடவடிக்கை என்பதை, உங்களுக்குப் படிக்கத் தெரிந்தால் நீங்களே ஜோன்ஸின்

கையெழுத்திலும் ஸ்நோபாலின் கை யெழுத்திலும் உள்ள கடிதங்களைப் படித்து அறிந்து கொள்ளலாம். சரியான சமயத்தில் மிருகங்களுக்குப் போக்குக் காட்டி ஏமாற்றி விடுவது என்பது ஸ்நோபாலின் திட்டம். வீட்டையும் பண்ணை யையும் மனிதர்கள் கைப்பற்றிவிடுவார்கள் என்று செய்த யுக்தி அது. அநேகமாக ஸ்நோபாலின் யுக்தி பலித்தேவிட்டது என்று தான் சொல்லவேண்டும், இல்லையா? அன்று நம்மைக் காப் பாற்றியது யார், தெரியுமா? சொல்லுகிறேன் கேளுங்கள், தோழர்களே! நமது வீரத் தலைவர், தோழர் நெப்போலியன் செய்த தீரச் செயல்களால் நாம் அன்று தப்பினோம். உங்களுக்கு ஞாபகமில்லையா? ஜோன்ஸும் அவன் ஆட்களும் முற்றத்துக்குள் வந்தபோது, எப்படி ஸ்நோபாலும் மற்ற மிருகங்களும் பயந்து பின்வாங்கின என்று உங்களுக்கு ஞாபகமில்லையா? அப்படிப் பின்வாங்கக் காரணமாக இருந்தது ஸ்நோபால்தான். அந்தச் சமயத்திலே, பீதியின் உச்சியை எட்டியிருக்கும் சமயத்திலே, எல்லா மிருகங்களும் திரும்பி ஓடித் தப்பிக்க எண்ணும் சமயத்திலே, எல்லாம் போய்விட்டது என்று எண்ணுகிற சமயத்தில், தோழர் நெப்போலியன் குதித்துப் பாய்ந்தது, ‘மனிதகுலம் நசியட்டும்’ என்று கர்ஜித்தது. பாய்ந்து ஓடி ஜோன்ஸின் ஆடு சதையைப் பற்றிக் கடித்தது. இதெல்லாம் நிச்சயமாக உங்களுக்கெல்லாம் ஞாபகம் இருக்கவேண்டுமே, தோழர்களே?” என்றது ஸ்க்வீலர், சுறுசுறுப்பாக அங்குமிங்கும் குதித்துக்கொண்டே.

இப்படி விறுவிறுப்பான வார்த்தைகளால் அந்த யுத்த களத்தை ஸ்க்வீலர் வர்ணிக்கும்போது, மற்ற விலங்குகளுக்கும் இதில் ஏதோ நடந்தது என்கிற ஞாபகம் வரத்தான் செய்தது எது எப்படியானாலும், ஸ்நோபால் திரும்பி, புறமுதுகிட்டு ஓடியது என்றும், மற்ற மிருகங்கள் அதைப் பின்பற்றின என்றும் ஞாபகம் வரத்தான் வந்தது. இருந்தும் பாக்ஸருக்குத் திருப்தியோ, அமைதியோ பிறக்கவில்லை.

கடைசியில் அது சொல்லிற்று: “ஸ்நோபால் முதலிலேயே துரோகியாக இருந்ததாகத் தோன்றவில்லை. பின்னர் செய்தது வேறு காரியம். ஆனால், மாட்டுக்கொட்டில் யுத்தத்தில் அது நம்முடன், நம்மில் ஒன்றாகத்தான் இருந்தது. நல்ல தோழனாகத் தான் இருந்தது.”

ஸ்க்வீலர் நிமிர்ந்து சொல்லிற்று: “நமது தலைவர் தோழர் நெப்போலியன் அழுத்தமாகச் சொல்லுவது இதுதான். சந்தேகத்துக் கிடமின்றி நெப்போலியன் சொல்லிவிட்டது. புரட்சி என்பது பற்றிய சிந்தனை ஏற்படுவதற்கு முந்திய நாட்களிலிருந்தே, ஸ்நோபால் துரோகியாகத்தான் இருந்து வந்திருக்கிறது. எப்போதும் அது ஜோன்ஸின் உளவாளியாகத்தான் இருந்து வந்திருக்கிறது என்று

நெப்போலியன் மறுபேச்சுக்கிடமின்றி தெரிவித்துவிட்டது.”

“அப்படியானால் அது வேறு விஷயம். தோழர் நெப்போலியன் இப்படிச் சொல்லிவிட்டால் அதற்கு மறு பேச்சு ஏது?” என்று விஷயத்தை ஏற்றுக்கொண்டது பாக்ஸர்.

“அதுதான் சரியான வழி தோழரே” என்று பாக்ஸரைப் பாராட்டிய அதே நிமிடம் ஸ்க்வீலர் அதன் மீது ஒரு வெறுப்புப் பார்வையை வீசியது. போவதற்கு எழுந்த அது, மீண்டும் திரும்பிச் சொல்லிற்று: “இந்தப் பண்ணையில் வாழும் ஒவ்வொரு மிருகமும் எப்போதும் விழித்த கண்ணுடன் இருக்க வேண்டும் என எச்சரிக்கிறேன். இன்று நம்மிடையே ஸ்நோபாலின் உளவாளிகள் சிலர் இருக்கிறார்கள் என்று தகவல் கிடைத் திருக்கிறது. கவனமாக இருக்கவேண்டியது நமது பொறுப்பு!”

நான்கு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் மாலையில் வெளி முற்றத்தில் எல்லா மிருகங்களும் வந்து கூடவேண்டும் என்று நெப்போலியன் அறிவித்தது. விலங்குகள் எல்லாம் வந்து கூடியபின் நெப்போலியன் வேட்டை நாய்கள் புடைசூழ தன் மாளிகையிலிருந்து வந்தது. அந்தச் சந்தர்ப்பத்துக்கென்று அது தனக்குத்தானே அளித்துக்கொண்ட மெடல்கள் இரண்டையும் (விலங்கு வீரன் - முதல் தரம், விலங்கு வீரன் - இரண்டாம் தரம்) அணிந்து கொண்டு வந்து நின்றது. ஒன்பது வேட்டை நாய்களும் பயங்கரமாகக் கத்திக்கொண்டு தலைவர் நெப்போலியனைச் சுற்றிச் சுற்றி வந்தன. நாய்களின் குரல் அங்கு கூடியிருந்த மிருகங் களை அச்சுறுத்துவதாக இருந்தது. என்ன நடக்கப் போகிறதோ என்று மௌனமாகப் பயந்து நடுங்கின விலங்குகள் எல்லாம். ஏதோ பயங்கரமான ஒரு நிகழ்ச்சி நடக்கத்தான் போகிறது என்று அவற்றிற்கு முன் கூட்டியே தெரிந்துவிட்டது போலும்.

முகத்தைச் சுளித்துக்கொண்டு, கூடியிருந்த சபையைப் பார்த்துக் கொண்டே மௌனமாகச் சிறிதுநேரம் நின்றது நெப்போலியன். பிறகு உரக்க ஒருதரம் உறுமிற்று. உடனே வேட்டை நாய்கள் பாய்ந்தோடிப்போய் நான்கு வாலிபப் பன்றிகளின் காதுகளைப் பிடித்துக் கடித்து இழுத்துக் கொண்டு வந்து நெப்போலியன் காலடியில் கிடத்தின. பயத்தாலும் வலியாலும் அந்தப் பன்றிகள் கத்தின. அவற்றின் காதுகளிலிருந்து ரத்தம் ஒழுகியது. ரத்தத்தை ருசி பார்த்த வேட்டை நாய்கள் கட்டுக்கடங்காமல் வெறிகொண்டு விடுமோ என்று எல்லோருக்குமே பயமாக இருந்தது. நாய்களில் மூன்று திடீரென்று பாக்ஸர் மேலும் பாய்ந்ததைக் கண்டு, கூடி யிருந்த மிருகங்கள் ஆச்சரியப்பட்டுப்போயின. ஆனால், நாய்கள் பாய்ந்து வருவதைக்

கண்ட பாக்ஸர், முன்னங்காலைத் தூக்கி, வெகுதூரத்துக்கப்பால் போய் விழும்படி ஒரு நாயை உதைத்தது. இரண்டாவது நாயைத் தன் காலால் அறைந்து பிடித்துக் கொண்டது. மற்றது வாலைத் தொங்கப்போட்டுக்கொண்டு ஓடிவிட்டது. காலின்கீழ் அகப்பட்டுக்கொண்ட நாய் பரிதாப மாகக் கத்திக்கொண்டு, தன்னை விடுவித்துவிடும்படிக் கெஞ்சியது. நாயை விடுவிப்பதா, வேண்டாமா என்று கேட்கிற மாதிரி நெப்போலியனைப் பார்த்தது பாக்ஸர். நெப்போலியன் முகம் இருண்டது; கீச்சுக் குரலில் 'விட்டு விடு' என்று உத்தரவிட்டதும் பாக்ஸர் நாயை விடுவித்துவிட்டது. உடம்பில் பல காயங் களுடன், ஊளையிட்டுக்கொண்டே, வாலைக் காலுகளுக்கிடையில் தொங்கவிட்டுக்கொண்டு, நாய் நெப்போலியன் காலடியில் போய் விழுந்தது.

கூக்குரலும் ஆரவாரமும் சிறிது நேரத்திற்கெல்லாம் அடங்கி விட்டன. பீதிகொண்ட முகத்துடன் நான்கு பன்றிகளும் தங்கள் கதி என்னவாகுமோ என்று நடுங்கிக்கொண்டு நின்றன. செய்த குற்றங்களை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று உத்தரவிட்டது நெப்போலியன். 'இனி ஞாயிறன்று காலையில் விவாதக் கூட்டங்கள் வேண்டாம் என்று நெப்போலியன் உத்தரவிட்ட போது, அதை மறுத்து ஆர்ப்பாட்டம் செய்த பன்றிகள் தான் அவை. வேறு எவ்விதமான தூண்டுதலும் இல்லாமலேயே அவை ஒன்றன்பின் ஒன்றாகத் தங்கள் தவறுகளையெல்லாம் கூறின. ஸ்நோபால் நாடுகடத்தப்பட்டதிலிருந்து அதனுடன் ரகசியமாக உறவு வைத்துக் கொண்டிருந்ததாகவும் விலங்குப் பண்ணையையும், நெப்போலியனையும் கவிழ்க்க அவை ஸ்நோபாலுடன் சேர்ந்து சதி செய்துவந்திருப்பதாகவும், காற்றாடி இயந்திரத்தைச் சாய்க்க அவை உதவி செய்ததாகவும், விலங்குப் பண்ணையை ஃபிரடெரிக்குக்கு தந்து விடுவதாக அவையும் ஸ்நோபாலும் வாக்களித்திருப்பதாகவும் அவை தாமாகவே ஒப்புக் கொண்டன. இதையும் தவிர, ஸ்நோபால்தான், எப்போதுமே ஜோன்ஸின் கையாளாக இருந்து வந்திருப்பதாகத் தங்களிடம் ரகசியமாக ஒப்புக்கொண்டதையும் சொல்லின அவை. இப்படித் தங்கள் குற்றங்களைத் தாங்களே கூறிமுடித்ததும், நாய்கள் அவற்றின் மேல் பாய்ந்து, குரல்வளையைக் கிழித்து, அங்கேயே அந்த நான்கு துரோகிகளையும் கொன்றுவிட்டன. வேறு எந்த மிருகமாவது

எந்தக் குற்றத்தையாவது செய்திருந்தால் அதை ஒப்புக்கொள்ள முன்வரலாம் என்று பயங்கரமான குரலில் சொல்லிற்று நெப்போலியன்’

முட்டைகளைப் பற்றிய எதிர்ப்பு எழுந்தபோது, அதில் தலைமை வகித்த மூன்று பெட்டைக் கோழிகளும் முன்வந்து தங்கள் குற்றங்களைக் கூறின. ஸ்நோபால் தங்கள் கனவில் வந்து, நெப்போலியனுக்கு எதிராக சதிசெய்யச் சொல்லித் தங்களைத் தூண்டியதாக அவை ஒப்புக்கொண்டன. “நெப்போலியன் உத்தரவு களுக்குக் கீழ்படியாதே!” என்று கனவில் ஸ்நோபால் சொன்ன தாக அவை கூறின. அந்த மூன்று கோழிகளும் அங்கேயே கொல்லப்பட்டன. பிறகு ஒரு வாத்து முன்வந்து, முந்திய அறுவடைக் காலத்தில் ஆறு கதிர்களை ரகசியமாகத் திருடித் தான் தின்றுவிட்டதாக ஒப்புக்கொண்டது. பிறகு ஒரு ஆடு முன் வந்து, தான் ஸ்நோபாலின் தூண்டுதலால் குடிநீர் நிரம்பிய குளத்தில் மூத்திரம் பெய்ததாக ஒப்புக்கொண்டது. ஒரு கிழட்டு ஆடு இருமலால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் போது, சொக்கப் பனையைச் சுற்றிச் சுற்றித் துரத்தித் தாங்கள் கொன்றுவிட்டதாக இரண்டு ஆடுகள் தங்களையே குற்றம் சாட்டிக் கொண்டன. அந்தக் கிழட்டு ஆடு நெப்போலியனின் சிறந்த பக்தர்களில் ஒன்று என்றும் சொல்லின. எல்லாவற்றிற்கும் மரண தண்டனை விதித்து அந்த இடத்திலேயே நிறைவேற்றப்பட்டது. இப்படி யாகப் பல மிருகங்கள் தங்களைப் பற்றியே விதவிதமாகக் குற்றம் சாட்டிக்கொண்டு அங்கேயே உயிர் துறந்தன. நெப்போலியன் காலடியில் சடலங்கள் போர் போலக் குவிந்தன. ரத்த நாற்றம் காற்றிலே கலந்து வீசியது. ஜோன்ஸ் போன பிறகு, அந்தப் பண்ணையிலே இதுவரை இவ்வளவு ரத்த வாடை அடித்தது கிடையாது.

இதெல்லாம் ஆன பிற்பாடு பன்றிகளையும் நாய்களையும் தவிர மற்ற விலங்குகளெல்லாம் சேர்ந்துகொண்டு தலை தொங்க முற்றத்தைவிட்டு வெளியேறின. அன்றைய நிகழ்ச்சிகள் அவைகளை துயரத்தில் ஆழ்த்தின. எது அதிகத் துயரமும் பயமும் தந்தது என்று அவைகளாலேயே நிச்சயிக்க முடியவில்லை. ஸ்நோபாலுடன் கூடிக்கொண்டு விலங்குப் பண்ணையைக் கவிழ்க்கச் சதிசெய்த மிருகங்களைத் திட்டுவதா? அல்லது இப்போது கண்முன் நடந்த தண்டனை நிறைவேற்றுதலைத் திட்டுவதா என்று அவற்றிற்குத் தெரியவில்லை. துரோகத்தைப் போலவே, இந்த ரத்த வெறிச் செயலும் மனதுக்குக் கஷ்டம் தந்த காரியம் என்று அவை கருதின.

இதைப் போலவே பயங்கரமான காரியங்கள் முந்திய நாட்களில் பண்ணையில் நடந்திருக்கின்றன. ஆனால், தங்கள் சுதந்திரத்துக்குப் பின் நேர்ந்த இந்த முதல் ரத்த வெறி எல்லா வற்றையும்விடப் பயங்கரமானதாக அந்த மிருகங்களுக்குப் பட்டது. ஜோன்ஸ் அடித்து விரட்டப்பட்டதன் பின், இன்று வரை பண்ணையிலே ஒரு மிருகம் வேறு ஒரு மிருகத்தை கொன்ற தில்லை. ஒரு எலியைக்கூட எந்த விலங்கும் கொன்றதில்லை. இப்படி யோசித்துக்கொண்டே மிருகங்கள் எல்லாம் பாதி முடிந்திருந்த காற்றாடி இயந்திரத்தருகே போய்ச் சேர்ந்தன. ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு வாய்திறவாமல் சிறிதுநேரம் படுத்துக்கிடந்தன. உஷ்ணமும் பரஸ்பர உதவியும் தேவை என்று எண்ணியவை போல க்ளோவர், முரியல், பெஞ்சமின், மாடுகள், ஆடுகள், மற்றும் வாத்துகள், கோழிகள் எல்லாம் நெருக்கியடித்துக் கொண்டு படுத்திருந்தன. அந்தப் பன்றிகளையும், நாய்களையும், பூனையையும் தவிர மற்ற மிருகங்களெல்லாம் அங்கிருந்தன. நெப்போலியன் கூட்டம் கூட உத்தரவிடுவதற்குச் சற்று முன்னரே பூனை எங்கேயோ போய்விட்டது. சிறிதுநேரம் எந்த மிருகமும் பேசவில்லை. பாக்ஸர் மட்டும் பேசாமல், படுக்கவும் படுக்காமல், எழுந்து நின்று கொண்டிருந்தது. மேலும் கீழும் நடந்துகொண்டே, வயிற்றுப் பக்கத்தில் வாலால் தட்டி அடித்துக்கொண்டு, ஆச்சரியத்தைக் குறிப்பதற்காக ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டு அது நின்றது. கடைசியில் அது சொல்லியது:

"எனக்கு எதுவும் புரியவில்லை; இந்த மாதிரியான காரியங்கள் நமது பண்ணையிலே நடக்குமென்று நான் எண்ணவேயில்லை. இதெல்லாம் நமக்குள் ஏற்பட்டுள்ள குற்றங்குறைகளால் வருவ தாகத் தான் இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இதற்கு வழி என்ன என்று எனக்குத் தெரிகிறது. நாம் இன்னும் அதிகமாகச் சிரமப்பட்டு வேலைசெய்ய வேண்டும், அவ்வளவு தான். இன்று முதல் நான் முக்கால் மணிக்குப் பதில் ஒருமணி நேரம் முன்னதாக வேலைசெய்யத் தொடங்குவேன்."

பாக்ஸர் தடதடவென்று நடந்து, கல் வெட்டும் குன்றுப் பக்கம் போயிற்று. அங்கே போய், ஒன்றன்பின் ஒன்றாக, இரண்டு வண்டிகள் நிறையக் கற்களை நிரப்பி, அவ்வண்டிகளை இழுத்து வந்து காற்றாடி இயந்திரத்தருகே சேர்த்தது. அதன்பிறகுதான் அது படுத்தது.

மிருகங்கள் பேச்சு எதுவும் பேசாமலே க்ளோவரைச் சுற்றிப் படுத்திருந்தன; படுத்துக்கிடந்த அந்த மேட்டிலிருந்து பார்த்தால் எதிரே பண்ணை முழுவதும் நன்றாகத் தெரிந்தது.

ராஜபாட்டை வரை பரந்துகிடந்த பெரிய மைதானம், வைக்கோல் போர், கிணறு, குட்டை, குடிதண்ணீர்க் குளம், உழுது பண்பட்ட வயல்களும் அதில் முளைத்து வளர்ந்து கொண்டிருந்த இளம் பச்சை கோதுமைப் பயிர், பண்ணைக் கட்டிடத்தின் மத்தியில் இருந்த புகை போக்கியிலிருந்து வானை நோக்கிச் சென்றுகொண்டிருந்த புகை, எல்லாமே அங்கிருந்து தெரிந்தன. வானம் தெளிவாகவும் களங்கமற்றுமிருந்தது. வசந்த கால கோதுமைப் பயிரும் சூரிய ஒளியில் பளபளத்தன. பண்ணை இவ்வளவு அழகான, மகிழ்ச்சியூயட்டும் பிரதேசம் என்பதை அவை இதற்குமுன் அவ்வளவு நன்றாக அறிந்ததேயில்லை. இவ்வளவும் தங்களுக்கே சொந்தமானவை என்பதை நினைத்துப் பார்த்தபோது அவற்றிற்கு ஆச்சரியம் உண்டாயிற்று. அப்போது க்ளோவரின் கண்களில் நீர் நிறைந்தது. அதன் சிந்தனைகளை அதனால் வாய்விட்டுச் சொல்ல முடிந்தால், அது என்ன சொல்லி யிருக்கும்?

பல வருடங்களுக்கு முன்பு மனிதகுலத்தை அழித்துவிடுவது என்று புரட்சிக்கோலம் பூண்ட விலங்குகள் இந்த நிலையை எய்துவதற்காகவா இப்படித் தொடங்கினார்கள்? அவர்கள் கொண்ட லட்சியம் என்ன? நடந்திருப்பது என்ன? கிழட்டுத் தளபதி அன்று இரவு, புரட்சியைப் பற்றி பேசி, மிருகங்களைச் செயலுக்குத் தூண்டியது. இந்த பயங்கர நிகழ்ச்சிகளும் பலிகளும் உயிர்க் கொலைகளும் நிகழுவதற்காகவா? இல்லவே இல்லை! எதிர்காலம் பற்றி க்ளோவர் அப்போது தன் மனதில் எவ்வாறு உருவகப்படுத்திக் கொண்டிருந்தது? அநியாயமும் பட்டினியும் அற்ற ஒரு சமூகத்தை அது கற்பனை செய்து பார்த்தது. மிருகங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று சரிநிகர்ச் சமானமாக, தோளாடு தோள் நின்று சுதந்திரமாக இருக்கும் ஒரு நிலையை எண்ணிப் புரட்சியில் இறங்கியது அது. பலசாலிகள் பலமற்றதைக் காப்பாற்றும்; ஒவ்வொன்றும் அதனதன் சக்திக்கேற்றபடி வேலை செய்யும்; அதனதன் பசிக்கேற்றபடி உணவு உட்கொள்ளும். அன்று, கிழட்டுத் தளபதி பேசியபோது, தன் காலடியில் உட்கார்ந்துகொண்டு அப்பிரசங்கத்தைக் கேட்ட வாத்து குஞ்சுகளின் ஞாபகம் வந்தது க்ளோவருக்கு. அம்மாதிரி பலமுள்ளவர்கள்

பலமற்றவர்களைக் காப்பாற்றவேண்டும். ஏன் இப்படியெல்லாம் நடந்தது என்று க்ளோவருக்குத் தெரியவில்லை. லட்சிய பூமிக்குப் பதில், ரத்தக்காடாக நாற்றமெடுக்கும் பண்ணையாக மாறிவிட்டதே இன்று! மனதிலிருந்ததை உரக்கச்சொல்லத் தைரியமில்லாமல் மிருகங்கள் நடமாட வேண்டியதாகிவிட்டதே! பண்ணையிலே சுதந்திரமாகத் திரிந்தவை, உறுமிக்கொண்டும் பயமுறுத்திக் கொண்டும் திரிந்த அந்த நாய்கள்தான், வேறு யாருமில்லை; தன் எதிரிலேயே தனது நண்பர்கள் குற்றவாளிகள் என்று தண்டிக்கப் பட்டதைப் பார்க்கும்படி வந்துவிட்டதே! உன் தோழர்கள் என்ன தான் குற்றம் செய்திருந்தாலும் உன் கண்ணெதிரிலேயே கொல்லப் படுவது என்பது சகித்துக்கொள்ளக்கூடிய காட்சியா? புரட்சி என்கிற சிந்தனையோ, எதிர்த்து எழுவது என்கிற சிந்தனையோ, க்ளோவரின் மனதில் இல்லவே இல்லை.

இப்பொழுது இருக்கிற நிலையிலும்கூட, ஜோன்ஸ் காலத்தை விடச் சிறந்த, உயர்ந்த நிலையில் மிருகங்கள் இருக்கின்றன என்பதை அது அறிந்திருந்தது. மற்றது எப்படியானாலும், மனிதர்கள் திரும்பி வருவது என்கிற காரியம் நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்றும் அது அறிந்திருந்தது. எது எப்படி நடந்தாலும், அது பயபக்தியுடன் இருக்கும்; சிரத்தை யாகவே தன் வேலைகளைக் கவனிக்கும்; தனக்கிடப்பட்ட உத்தரவுகளை அப்படியே நிறைவேற்றி வைக்கும்; நெப்போலியனின் தலைமையை எவ்வித நிபந்தனையும் இன்றி ஏற்றுக்கொள்ளும். ஆனாலும் தானும் மற்ற மிருகங்களும் எதிர்பார்த்தது இதுவல்ல; உழைத்ததும் இதற்காகவல்ல என்று அதனால் எண்ணாதிருக்க முடியவில்லை.

இதற்காகவா அவ்வளவு சிரமப்பட்டு அவை காற்றாடி இயந்திரத்தை நிர்மாணிக்க முயன்றன? இதற்காகவா அவை ஜோன்ஸின் துப்பாக்கிக்கும் அஞ்சாமல் போராடின? இப்படி ஓடின க்ளோவரின் சிந்தனைகள். இதையெல்லாம் வெளிப்படச் சொல்ல அதற்கு வார்த்தைகள்தான் அகப்படவில்லை.

கடைசியில் கிடைக்காத வார்த்தைகளுக்குப் பதில் ஒரு யுக்தியைக் கையாண்டது அது. “இங்கிலாந்தின் விலங்குகள்’ என்கிற பாட்டை அது உரக்கப்பாட ஆரம்பித்தது. சுற்றி

உட்கார்ந் திருந்த மிருகங்கள் எல்லாம் உடன் பாடத் தொடங்கின. ஒரு தடவை - இரண்டாவது தடவை - மூன்றாவது தடவையும் அவை அந்தப் பாட்டைப் பாடி முடித்தன. மெதுவாக, முழு மனதுடன், துயரம் ஆறுகிற வரையில் பாடின. அதற்கு முன் இவ்வளவு துயர மனோபாவத்துடன், இவ்வளவு உருக்கமாக அதைப் பாடியது கிடையாது.

மூன்றாவது தடவை அவை அந்தப் பாட்டைப் பாடி முடிப்பதற்கும் ஸ்க்வீலர் இரண்டு வேட்டை நாய்கள் பின் தொடர அங்கு வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது. அது வரும்போதே ஏதோ முக்கியமான செய்தி சொல்லவருகிறது என்பது தெரிகிறது. தோழர் நெப்போலியனின் தனி அறிக்கையின் படி, இனி மிருகங்கள் 'இங்கிலாந்தின் விலங்குகள்' என்கிற பாட்டைப் பாடக்கூடாது என்றது. இனிமேல் அதைப் பாடுவது சட்ட விரோதமாகும் என்றது.

மிருகங்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"ஏன்?" என்று கேட்டது முரியல்.

"அந்தப் பாட்டுக்கு இனி அவசியமேயில்லை தோழரே!" என்று பதில் அளித்தது ஸ்க்வீலர் விரைப்பாக. 'இங்கிலாந்தின் விலங்குகள்' என்ற பாட்டு புரட்சியின் கீதமாக இருந்தது. இப்போது புரட்சி முடிந்துவிட்டது. புரட்சியின் கடைசி கட்டம், இன்று நமது எதிரிகள், சதிகாரர்கள் கொலையுண்டதுடன் முடிந்துவிட்டது. வெளியேயும் உள்ளேயும் உள்ள எதிரிகளை நாம் வெற்றிகொண்டுவிட்டோம். எதிர்காலத்தில் நல்ல சமுதாயம் உருவாக வேண்டும் என்பதற்காகப் புரட்சி சமயத்தில் நாம் அந்தப் பாட்டைப் பாடினோம். இப்போது நமது லட்சிய சமுதாயம் உருவாகிவிட்டது. நிலைத்தும் விட்டது. இனிமேல் நம்மிடையே அந்தப் பாட்டுக்கு தேவையேயில்லை!" என்றது ஸ்க்வீலர்.

விலங்குகள் வெகுவாகப் பீதியடைந்திருந்தன. எனினும் ஒரு சில மிருகங்களாவது இதுபற்றி ஏதாவது விவாதம் தொடங்கி யிருக்கும். ஆனால், அந்தச் சமயம் பார்த்து ஆடுகள், "நாலு கால் நல்லது, இரண்டு கால் கெட்டது" என்று உரக்கப் பாடின. பல நிமிட நேரம் நீடித்த இந்தச் சப்தத்தில் இந்த விவாதம் சீக்கிரமே முடிவடைந்துவிட்டது.

ஆகவே அதற்குப் பிறகு விலங்குப் பண்ணையில், 'இங்கிலாந்தின் விலங்குகள்' என்கிற பாட்டும் பாடப்படாமல் போய்விட்டது. அதற்குப் பதில் மினிமஸ் என்கிற கவி ஒரு புதுப்பாட்டுக் கட்டினான்.

"விலங்குப் பண்ணை! விலங்குப் பண்ணை!

அதற்கு எதிராக நாங்கள் எதுவும் செய்யமாட்டோம்"

என்று தொடங்கியது அந்தப் புதிய பாட்டு. கொடி பறக்கவிட்ட பின் இந்தப் புதிய பாட்டுத்தான் பாடப்பட்டது. ஆனால், இந்தப் புதிய பாட்டு மிருகங்களில் பெரும்பாலானவற்றிற்குப் பிடிக்க வில்லை. ‘இங்கிலாந்தின் விலங்குகள்’ என்பதுதான் உயர்ந்த பாட்டு என்று அவை நினைத்திருந்தன. எனினும் அதை வெளிப் படையாகச் சொல்ல முடியவில்லை.

# 8

சில நாட்கள் கழிந்தன . கொலைத் தண்டனை யால் ஏற்பட்ட பயங்கரம் ஒருவாறு அடங்கிய பிறகு சில மிருகங்களுக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது . புரட்சி காலத்தில் செய்த ஆறாவது விதியின்படி 'எந்த மிருகத்தையும் மற்றொரு மிருகம் கொல்லவே கூடாது ' என்று சட்டம் இயற்றினோம் போல இருக்கிறதே . இப்போது அது என்ன ஆயிற்று என்று சில மிருகங்கள் சிந்தித்தன . பன்றிகள் காதிலோ நாய்கள் காதிலோ விழும்படியாக மிருகங்கள் எதுவும் இந்த விஷயங்கள் பற்றிப் பேசவில்லை . எனினும் நடந்த கொலைத் தண்டனைகள் இந்த விதியை மீறியே நடந்தன என்றுதான் எல்லா மிருகங்களும் அபிப்பிராயப்பட்டன . பாக்ஸர் ஆறாவது விதியை சொல்லும்படி பெஞ்சமினைக் கேட்டது . ஆனால் , பெஞ்சமின் இதிலெல்லாம் நான் சம்பந்தப்படமாட்டேன் என்று வழக்கப்படி சொல்லிவிடவே , முரியலைக் கூப்பிட்டு அந்த விதியை வாசிக்கச் சொல்லியது . முரியல் வாசித்தது . "எந்த மிருகமும் வேறு எந்த மிருகத்தையும் சரியான காரணமில்லாமல்

கொல்லக்கூடாது" என்று எழுதியிருந்தது. சரியான காரண மில்லாமல் என்கிற வார்த்தைகள் மிருகங்கள் கவனத்தில் நிற்காமல் நழுவி விட்டிருந்தன. இப்பொழுது அவற்றிற்கும் புரிந்தது, விதிகளில் எதுவும் மீறப்படவில்லை என்று. ஸ்நோ பாலுடன் சேர்ந்துகொண்டு விலங்குப் பண்ணைக்கெதிராகச் சதிசெய்தவர்களைக் காரணமில்லாமல் கொன்றதாக யாரும் விவாதிக்க முடியாதல்லவா?

சென்ற ஆண்டில் வேலை செய்ததைவிட அதிகமாக இந்த வருஷம் முழுவதும் வேலை செய்தன மிருகங்கள் எல்லாம். காற்றாடி இயந்திரத்தைத் திரும்பவும் நிர்மாணிப்பது மட்டு மல்ல; அதன் சுவர்களை முன்னைவிட இரண்டுமடங்கு கன முள்ளதாகக் கட்டவேண்டும். மற்ற பண்ணைக் காரியங் களையும் உரிய காலத்தில் கவனித்துக்கொள்ள வேண்டும். இதையெல்லாம் செய்வதற்கு விலங்குகள் திணறத்தான் வேண்டி யிருந்தது. மிகவும் கடினமான உழைப்பின் பேரில்தான் அதெல்லம் சாத்தியமாயிற்று. சில சமயங்களில்

ஜோன்ஸ் காலத்தைவிட அதிகமாகத் தாங்கள் வேலைசெய்வது போலவும், ஆனால், அதைவிடக் குறைவாக உணவு அருந்துவது போலவும் சில விலங்குகளுக்குத் தோன்றும். ஞாயிறன்று காலை வேளைகளில் ஸ்க்வீலர் பன்றி, காகிதத்தில் புள்ளிவிவரக் குறிப்புகளுடன், மிருகங்களின் வாழ்க்கைத்தரம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்று கணக்கிட்டுச் சொல்லிக்காட்டும்.

உணவுதானிய உற்பத்தி இருநூறு சதம் ஏறியிருப்பதாகவும், அல்லது சில மாதங்கள் முந்நூறு, ஐந்நூறு சதவிகிதம் ஏறி யிருப்பதாகவும் புள்ளிவிவரங்கள் தரும் அந்த ஸ்க்வீலர் பன்றி. அதைப் பற்றி மிருகங்களில் எதுவும் அவநம்பிக்கை கொள்ள விரும்பவில்லை. அவநம்பிக்கைப்பட ஆதாரமும் எதுவும் இல்லை; ஏனென்றால் அந்த விலங்குகளுக்கு ஜோன்ஸ் காலத்தில் வாழ்க்கை எப்படியிருந்தது என்பது அநேகமாக மறந்துபோய் விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். எது எப்படியானாலும், மிருகங்கள் மனத்தில் புள்ளிவிவரக் கணக்குக்குப் பதில் உணவை அதிகமாகத் தந்தால் நன்றாக இருக்கும் என்கிற எண்ணம் ஏற்படாமல் இல்லை.

பண்ணை விலங்குகளுக்கு உத்தரவுகள் எல்லாம் இப்போது ஸ்க்வீலர் பன்றி மூலமாகவோ அல்லது வேறு ஏதாவது ஒரு பன்றி மூலமாகவோ தரப்பட்டது. பதினைந்து நாளைக்கொரு தரம் கூட நெப்போலியன் மற்ற விலங்குகள் கண்ணில் படுவது கிடையாது. என்றாவது வெளியே வந்தால், நாய்கள் புடைசூழ வருவது மாத்திரமில்லை; அதற்குமுன்னால் உரத்த குரலில் கட்டியங் கூறிக்கொண்டு தங்கநிறமான சேவல் ஒன்றும் வந்தது. நெப்போலியன் பேச வாயைத் திறக்குமுன் ஒருதரம் கூவும் இந்தக் கோழி. பண்ணை வீட்டிலேயேயும் கூட நெப்போலியன் மற்ற பன்றிகளுடன் வசிக்காமல், தனியாக ஒரு அறையில் வசித்து வந்ததாகத்தான் சொன்னார்கள். சாப்பிடுவதும் தனியாகத் தான். இரண்டு நாய்களைத் தவிர வேறு எதையும் தன் அருகில் அது அண்டவிடுவதில்லையாம். வீட்டு முன்னறையில் கண்ணாடி அலமாரியில் வைக்கப்பட்டிருந்த அழகான உணவுத் தட்டுகளில் தான் சாப்பிடுவதாம். மற்ற இரண்டு புரட்சி தினங்களைப்போல, இனி நெப்போலியன் பிறந்த நாளன்றும்கூடத் துப்பாக்கி வெடிச் சப்தம் கேட்கும் என்று அறிவிக்கப்பட்டது.

இப்போது நெப்போலியனை வெறுமனே நெப்போலியன் என்று யாரும் சொல்வது கிடையாது. “நமது தலைவர், தோழர் நெப்போலியன்” என்றுதான் எல்லோரும் குறிப்பிடுகின்றன. பன்றிகள் அந்தத் தலைவருக்கென்று பலவிதமான பட்டங்கள் சூட்டி மகிழ்ந்தன.

‘விலங்குகளின் தந்தை; மனித குலத்தின் பயங்கர எதிரி,’ ‘ஆட்டு மந்தையின் காவலாளன்’, ‘வாத்துகளின் நண்பன்’ இத்தியாதிப் பெயர்கள் நெப்போலியனுக்குச் சூட்டப் பட்டன. ஸ்க்வீலர் தனது பிரசங்கங்களின் போது, கண்கள் இரண்டும் ஆறாய்ப் பெருக, நெப்போலியனின் அறிவு, ஆற்றல், பெருந்தன்மை, நன்மனம், விலங்குகளிடம் அது கொண்டுள்ள அன்பு, இரக்கம் எல்லாவற்றையும் பற்றி மிகமிக உருக்கமாகப் பேசும். மற்ற பண்ணைகளில் இன்னமும் புரட்சியின் நலன்கள் ஏதுமின்றி, அறிவிலிகளாக அடிமைகளாக வசித்துவரும் மிருகங்களிடம் நெப்போலியன் எவ்வளவு அன்பும் இரக்கமும் கொண்டிருந்தது என்பதை அடிக்கடி எடுத்துச் சொல்லிக் கண்ணீர்விடும் ஸ்க்வீலர்.

ஏதாவது ஒரு காரியம் வெற்றிகரமாக முடிந்தாலோ, அல்லது ஒரு நற்பயன் ஏற்பட்டாலோ, அது நெப்போலியனாலேயே ஏற்பட்டது என்று சொல்வது வழக்கமாகிவிட்டது. ஒரு பெட்டைக் கோழி இன்னொன்றிடம் சொல்லும்: “நமது தலைவர் தோழர் நெப்போலியன் வழிகாட்டியதால், நான் ஆறு நாட்களில் ஐந்து முட்டைகள் இட்டேன்.,” குளத்தில்நீர் குடிக்கப் போகும் இரண்டு பசுக்கள் பேசிக்கொள்வதைக் கேளுங்கள்: “தோழர் நெப்போலியனின் தலைமைக்கு நன்றி! அதனால்தான் இந்தத் தண்ணீர் இவ்வளவு இனிக்கிறது.” பண்ணையிலே நெப்போலி யனைப் பற்றிய கருத்து, மினிமஸ் என்கிற கவி எழுதிய பாட்டு நன்கு பிரதிபலிக்கிறது. பாட்டின் தலைப்பு “தோழர் நெப்போலியன்.”

“தந்தையற்றவர்களின் நண்பனே!

ஆனந்தத்தின் வற்றாத ஊற்றே!

கருணையின் பிரபுவே! உன்னைப் பார்க்கும் தோறும்

தீப்பொறி எழுகிறது என் உள்ளத்திலே!

அமைதியும் ஆற்றலும் உள்ள உன் கண்கள்

வானிலே ஆதவன்போல ஒளி வீசுகின்றன

தோழர் நெப்போலியன்!

விலங்குகள் கேட்பதை யெல்லாம்

இல்லை யெனாமல் கொடுப்பவன் நீ

இரண்டுவேளை முழு உணவு; படுத்துறங்க வைக்கோல்

பெரியதும் சிறியதுமான விலங்குகள் பலவும்

தங்களிடங்களில் அமைதியாக உறங்குகின்றன

எல்லாவற்றையும் பாதுகாக்கிறாய் நீ

தோழர் நெப்போலியன்!

எனக்கு ஒரு பன்றிக்குட்டி பிறந்தால்

அது தக்க பருவம் அடையும் முன்

பெரியதாக வளரும் முன்

உன் பெருமை பாடக் கற்றுத் தருவேன்

உனக்கு நன்றி பாராட்டக் கற்றுத் தருவேன்.

முதல் மூச்சிலே அது சொல்லவேண்டும்

‘தோழர் நெப்போலியன்’ என்று!”

நெப்போலியனே இந்தக் கவிதையைப் பாராட்டிப் புகழ்ந்தது. ஏழு விதிகள் பொறித்திருந்த சுவருக்கு எதிர்த்த சுவரில் இந்தக் கவிதையும் பொறிக்கப்பட்டது. அதற்குமேல், மூக்கு நீளமாகத் தெரியும்படியான நிழல் உருவமாக நெப்போலியனின் உருவப் படமும் வரையப்பட்டது. வெள்ளை வர்ணத்தில் அதை வரைந்தது ஸ்க்வீலர் பன்றிதான்.

இடையில், விம்பர் என்கிற வக்கீலின் உதவியால், நெப்போலியன் பலதரப்பட்ட சிக்கலான பேரங்களில், முக்கிய மாக ஃபிரடெரிக், பில்கிங்டன் ஆகிய இருவரிடமும், ஈடு பட்டிருந்தது. வெட்டி வைத்த மரம் இன்னும் விற்காமலே கிடந்தது. இருவரில் ஃபிரடெரிக் அந்த மரத்தை வாங்கிவிட வேண்டும் என்று அதிகமாகத் துடித்தான். ஆனால், அவன் சரியான விலைதர இணங்கவில்லை. அதே சமயம் ஃபிரடெரிக் விலங்குப் பண்ணைக்கு எதிராகச் சதி செய்துகொண்டிருக்கிறான் என்றும், மிருகங்களை எதிர்த்துப் போராடி, காற்றாடி இயந் திரத்தைத் தரை மட்டமாக்கப் போகிறான் என்றும் வதந்திகள் மீண்டும் எழுந்து உலாவின. மீண்டும் கட்டிக்கொண்டிருந்த அந்தக் காற்றாடி இயந்திரத்தைப் பற்றி அவர்கள் பெரிதும் பொறாமை யுற்றியிருக்கிறார்கள் என்று பேசிக் கொள்ளப் பட்டது.

ஸ்நோபால் இன்னமும் பிஞ்ச்ஃபீல்டு பண்ணையில்தான் ஒளிந்திருக்கிறது என்றும் வதந்தி உலவிவந்தது. கோடை கால மத்தியிலே மூன்று கோழிகள் தாமாகவே முன்வந்து, ஸ்நோ பாலுடன்

சேர்ந்துகொண்டு நெப்போலியனைக் கொல்ல தாங்கள் சூழ்ச்சிகள் செய்ததாகத் தங்களையே குற்றம்சாட்டிக் கொண்டன. இதைக் கேள்வியுற்ற மற்ற மிருகங்கள் பதறிப் போயின. மூன்று கோழிகளும் உடனே கொலையுண்டன. நெப்போலியனைக் காப்பாற்ற இன்னும் பலமான பந்தோபஸ்துகள் செய்யப் பட்டன. நான்கு மூலைக்கு நான்கு நாய்கள் நின்று அதன் படுக்கையை இரவு முழுவதும் உறங்காமல் காவல் காத்தன. நெப்போலியனுக்கென்று தயாராகும் உணவுகள் எல்லா வற்றையும் பிங்கை என்கிற ஒரு பன்றிக்குட்டி முதலில் தின்று பார்த்துவிட்டு, விஷம் கலக்கவில்லை என்று சொன்ன பிறகு தான், தலைவர் சாப்பிடுவது என்கிற வழக்கமும் ஏற்பட்டு விட்டது.

அதேசமயம் நெப்போலியன் மரத்தையெல்லாம் பில்கிங்டனுக்கு விற்க ஏற்பாடு செய்துவிட்டதாகச் சொல்லிக்கொள்ளப் பட்டது. விலங்குப் பண்ணைக்கு அவசியமான பலபொருட்களை பாக்ஸ்பீல்டு பண்ணைக்கு ஒழுங்காகத் தந்துவர வேண்டியது என்று நெப்போலியனும் பில்கிங்டனும் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளப் போகிறார்கள் என்றுகூட வதந்தி இருந்தது. விம்பர் தான் இந்தப் பேச்சிலெல்லாம் நடுவே நின்று ஏற்பாடுகள் செய்தான். எனினும் நெப்போலியனும் பில்கிங்டனும் மிகவும் சிநேகபாவத்துடனேயே இருந்தார்கள். மற்ற விலங்குகளுக்கு பில்கிங்டனிடம் நம்பிக்கை இல்லை. அவனும் மனிதன்தானே? எப்படி அவன் நல்லவனாக இருக்க முடியும்? ஆனால், ஃபிரடெரிக்கைவிட அவன் எவ்வளவோ மேல் என்று நினைத் தன மிருகங்கள். ஃபிரடெரிக்கைப் பற்றி அவை பயமும் அரு வருப்பும் வெறுப்பும் கொண்டிருந்தன. கோடை முதிர முதிர, காற்றாடி இயந்திரக் கட்டிட வேலை முடியும் நாள் நெருங்க நெருங்க, விலங்குப் பண்ணையை ரகசியமாக ஃபிரடெரிக் தாக்கப்போகிறான் என்கிற வதந்தி வலுத்துக்கொண்டிருந்தது. அதற்கான ஏற்பாடுகள் எல்லாம் அவன் செய்து கொண்டிருக் கிறான் என்றும் சொன்னார்கள்.

ஃபிரடெரிக் இருபது மனிதர்களுடன் இருபது துப்பாக்கிகள் கொண்டுவரப்போகிறான் என்றார்கள். நீதிபதி, அரசாங்கம் எல்லாவற்றிற்கும் லஞ்சம் கொடுத்துக் கொஞ்ச நேரம் கண் மூடிக்கொள்ள ஏற்பாடு செய்துவிட்டான் என்றும் சொல்லிக் கொண்டார்கள். எப்படியாவது அவன் விலங்குப் பண்ணையைக்

கைப்பற்றிவிட்டால், அந்தப் பண்ணையையும் அவன் சொத் தாகவே பாவிக்க ஏற்பாடுகள் செய்வதாக அதிகாரிகளும் ஒப்புக் கொண்டு விட்டார்களாம். இதெல்லாம் தவிர, பிஞ்ச்ஃபீல்ட் பண்ணையில், தனது விலங்குகளை எவ்வளவு கொடுமையாக நடத்தினான் ஃபிரடெரிக் என்பது பற்றிக் கதை கதையாக மிருகங்கள் எல்லாம் கேள்விப்பட்டன. ஒரு கிழட்டுக் குதிரையை அவன் சவுக்காலடித்தே கொன்றுவிட்டானாம்! அங்கு பசுக் களெல்லாம் பட்டினியால் வாடுகின்றனவாம்; அடுப்பிலே போட்டு ஒரு நாயை உயிரோடு எரித்துவிட்டானாம் அவன். கோழிகளின் கால்களில் கத்திகளைக் கட்டி, அவற்றை ஒன்றோ டொன்று சண்டையிட வைத்து, வேடிக்கை பார்த்தானாம் அவன்.

தங்கள் தோழர்களை இப்படியெல்லாம் கொடுமையாக நடத்துகிறான் அவன் என்று கேள்விப்பட்டுக் கேள்விப்பட்டு ‘ஃபிரடெரிக்’ என்றாலே விலங்குகளின் ரத்தம் கொதிக்கத் தொடங்கியது; கோபத்தாலும் ஆத்திரத்தாலும் வெறியூட்டப் பட்டவர்கள் போலாயின அவை. சில சமயம், தாங்களே கிளம்பிப் போய் பிஞ்ச்ஃபீல்டுக்குள் புகுந்து போராடி, எல்லாவற்றையும் வீழ்த்திவிட்டு வரவேண்டும் என்று மிருகங்கள் ரோஷம் கொண்டு எழுந்தன; மனிதர்களை அடித்து விரட்டி விட்டு, அந்தப் பண்ணை விலங்குகளுக்கும் சுதந்திரம் அளிப்பது பற்றி யோசித்தன இந்த மிருகங்கள். அவசரப்பட்டு எதையும் செய்யக்கூடாது என்றும், தங்கள் தலைவர் தோழர் நெப்போலியன் தலைமையில் அவை பூரண நம்பிக்கை வைக்க வேண்டும் என்றும் சொல்லி, ஸ்க்வீலர் பன்றி இந்த சந்தர்ப்பங்களில் அவைகளைச் சமாதானம் செய்யும்.

இருந்தாலும் ஃபிரடெரிக்கைப் பற்றிய வரையில் மிருகங்களின் உணர்ச்சிகள் கொந்தளித்துக்கொண்டுதான் இருந்தன. ஒரு ஞாயிறன்று காலை, நெப்போலியனே கொட்டகைக் கூட்டத்தில் காட்சியளித்தது, தான் எப்போதுமே ஃபிரடெரிக்கிடம் பேரங்கள் எதுவும் வைத்துக்கொண்டதில்லை என்று அறிவித்தது. மரத்தை அவனுக்குத் தருவதாகப் பேச்சு வார்த்தையே நடைபெறவில்லை என்று கூறியது அது. இந்த மாதிரியான ஒரு அயோக்கியனுடன் பேச்சுவார்த்தை நடவடிக்கைகள் வைத்துக்கொள்வதே தன் கௌரவத்துக்கு இழுக்கு என்று பேசியது நெப்போலியன். புரட்சிச் செய்திகளை வெளியே பரப்பப் போய் வந்துகொண்டிருந்த புறாக்கள் கூட இனி பாக்ஸ்ஃபீல்ட் பக்கம்

போகக்கூடாது என்று உத்தரவிடப் பட்டது. “மனிதர்கள் சாகட்டும்!” என்கிற ஸ்லோகத் துக்குப் பதிலாக “ஃபிரடெரிக் சாகட்டும்!” என்கிற ஸ்லோகத்தைத் தான் இனி உபயோகிக்க வேண்டும் என்றும் உத்தரவிடப் பட்டது.

கோடை முடியும் தருவாயில் ஸ்நோபாலின் மற்றொரு தீய செயல் வெளியாயிற்று. கோதுமை வயலிலே, தானியப் பயிர்களுக்குப் பதில் ஏராளமான களைப் பூண்டுகள் வளர்ந்து விட்டன. இது எதனால் என்றால், ஓரிரவு ஸ்நோபால் விலங்குப் பண்ணைக்கு வந்து, கோதுமை விதைகளுடன் களைப்பூண்டு விதைகளையும் கலந்து வைத்து விட்டுப் போய்விட்டது. இந்தக் காரியத்தில் ஸ்நோபாலுக்குத் தான் உதவியதாகத் தன்னையே குற்றம் சாட்டிக்கொண்டு ஒரு ஆண் வாத்து விஷத்தைச் சாப்பிட்டுத் தற்கொலை செய்துகொண்டது.

இப்போது புதிதாக ஒரு விஷயம் மிருகங்களுக்குத் தெரிய வந்தது. அவற்றில் பெரும்பாலானவை ஸ்நோபாலுக்கு “விலங்கு வீரன் - முதல்தரம்” என்ற பட்டம் தரப்பட்டதாகத் தப்பாக எண்ணிக்கொண்டிருந்தன. அந்தப் பட்டம் ஸ்நோபாலுக்குத் தரப்படவில்லை என்று இப்போது தெளிவாக்கப்பட்டது.

மாட்டுக்கொட்டில் யுத்தத்துக்குப் பிறகு ஸ்நோபால் தற்பெருமையாகத் தானே பரப்பிக்கொண்ட ஒரு கட்டுக்கதையே தவிர உண்மையே அல்ல. பட்டம் தருவதா? யுத்தத்தில் செய்த சதிக்கு அதைத் தண்டிக்காமல் விட்டது பிசகு! தண்டிக்காமல் கண்டிப்பான வார்த்தைகள் மட்டும் பேசியனுப்பியது நெப்போலியன் என்று மிருகங்களுக்கு ஞாபகம் இருக்க வேண்டுமே! அப்படி ஒன்றும் ஞாபகமில்லை மிருகங்களுக்கு. இதையெல்லாம் குழம்பிய ஒரு மனோபாவத்துடன்தான் விலங்குகள் கேட்டுக் கொண்டிருந்தன. எது உண்மையென்று நம்புவதென்றே அவற்றிற்குத் தெரியவில்லை; ஆனால், ஸ்க்வீலர் சிறிது நேரம் பேசி, “ஞாபக சக்திக் குறைவினால்தான் நீங்கள் அப்படி நினைத்து விட்டீர்கள்” என்றது. எனவே மிருகங்களுக்கு எவ்வித சந்தேகத் துக்குமே இடமில்லாமல் போய்விட்டது.

இலையுதிர்க் காலத்தில் மிகவும் சிரமப்பட்டு, கடினமான முயற்சி செய்து காற்றாடி இயந்திரக் கட்டிட வேலையை ஒரு வழியாக முடித்துவிட்டன விலங்குகள். அதே சமயம் அறுவடையும் ஆக வேண்டியதாக இருந்தால்,வேலை மிகவும் கடுமைதான். உள்ளே இயந்திரங்கள் பொறுத்த வேண்டியது பாக்கி. விம்பர் அந்த இயந்திரங்கள் வாங்குவதற்குப் பேரம்

செய்து கொண்டிருந்தான். கட்டிடம் தயாராகிவிட்டது. எவ்வளவோ கஷ்டங்களைச் சமாளித்து, அனுபவமில்லாத தையும் பொருட் படுத்தாமல், மிகவும் எளிய ஆயுதங்களை மட்டும் உபயோகித்து ஸ்நோபாலின் எதிர்ப்பு யுக்திகள் எல்லாவற்றையும் மீறி விலங்குகள் பெரியதொரு சாதனையைச் சாதித்துவிட்டன. திட்ட மிட்டபடி முடித்தும் விட்டன. தங்களுடைய மகோன்னதமான சிருஷ்டியாகிய அந்தக் கட்டிடத்தைச் சுற்றிச் சுற்றி வந்து விலங்குகள் குதித்தன. முதல் தடவை நிர்மாணித்திருந்ததைவிட இப்போது கட்டிடம் அதிக அழகாக இருந்ததாக அவற்றிற்குத் தோன்றியது. தவிரவும் கட்டிடச் சுவர் முன்னிருந்ததைவிட இரண்டு மடங்கு கனம் இருந்தன. வெடி மருந்து வைத்துக் கிளப்பினால் ஒழிய, கட்டிடத்தை யாரும் எதுவும் அசைக்கக் கூட முடியாது. எப்படித்தான் உழைத்துப் பாடுபட்டார்களோ? எத்தனை எதிர்ப்புகளையும் அவ நம்பிக்கைகளையும் அவை சமாளிக்க வேண்டியதாக இருந்தது! காற்றாடி இயந்திரம் சுழல ஆரம்பித்த பின், விலங்குகள் வாழ்க்கை முந்திய வாழ்க்கையை விட எவ்வளவு மேன்மையானதாக இருக்கும்! இவற்றை யெல்லாம் பற்றி எண்ணிப் பார்க்கும்போது, அலுப்பு, களைப்பு எல்லாம் பறந்தோடிவிட்டன. உற்சாகமாகக் கைக்கோர்த்துக் கொண்டு அவை காற்றாடி இயந்திரக் கட்டிடத்தைச் சுற்றிச் சுற்றி வந்தன; ஆரவாரித்தன; வெற்றி முழக்கங்கள் பல செய்தன. நெப்போலியனே நேரில் அங்கு வந்து நின்றது. சேவல் முன் சென்று கட்டியம் கூற, நாய்கள் பின் தொடர்ந்து காவல் காக்க, நெப்போலியன் அங்கு வந்து முடிந்துவிட்ட கட்டிடத்தைப் பார்வை யிட்டது. மிருகங்களைப் பாராட்டியது. காற்றாடி இயந்திரத்துக்கு ‘நெப்போலியன் காற்றாடி’ என்று பெயர் வைத்து விடலாம் என்று சொல்லிற்று.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு சிறப்புக் கூட்டம் கூட்டப்பட்டது. அப்போது நெப்போலியன் கூறிய செய்தியைக் கேட்டு அவை ஆச்சரியத்தால் வாயடைத்துப் போயின. மரக் கட்டைகளை ஃபிரடெரிக்குக்கு விற்றுவிட்டதாக அறிவித்தது நெப்போலியன். மறுநாள் ஃபிரடெரிக்கின் வண்டிகள் வந்து அந்த மரக்கட்டைகளை எடுத்துப்போகும். பில்கிங்டனிடம் சிநேகமாக இருப்பதுபோல் இருந்த நாட்களிலும்கூட, உண்மையில் ஃபிரடெரிக்கிடந்தான் ரகசியமாக நட்புடன் இருந்ததாகச் சொல்லிக்கொண்டது நெப்போலியன்.

பாக்ஸ்வுட்டுடன் இருந்து வந்த எல்லா தொடர்புகளும் இப்போது

ரத்தாயின. பில்கிங்டனை அவமதிக்கும்படி தூது அனுப்பப்பட்டது. புறாக்கள் இனி பிஞ்ச்ஃபீல்டு பண்ணைப் பக்கம் போகக்கூடாது என்று உத்தரவிடப்பட்டது. "ஃபிரடெரிக் சாகட்டும்" என்கிற ஸ்லோகம் இப்போது "பில்கிங்டன் சாகட்டும்" என்று மாற்றப்பட்டது. அதே சமயம் நெப்போலியன், ஃபிரடெரிக்கைப் பற்றி உலாவிய வதந்திகள் அனைத்தும் பொய்யானவை என்று அறிவித்தது.

விலங்குப் பண்ணையைத் தாக்க ஃபிரடெரிக் சதி எதுவும் செய்யவில்லை என்றும், அவன் பண்ணையில் மிருகங்கள் சித்திரவதை செய்யப்பட்டதே கிடையாது என்றும், இதெல்லாம் மிகவும் நம்பகமான தகவல் என்று நெப்போலியன் பிரகடனம் செய்தது. அவையெல்லாம் ஸ்நோபாலும் அதன் சகாக்களும் கிளப்பிவிட்ட வதந்திகளாக இருக்கலாம் என்றும் கூறப்பட்டது. ஸ்நோபால் பிஞ்ச்ஃபீல்டு பண்ணையில் ஒளிந்து கொண்டிருக்க வில்லை என்பது நன்கு தெளிவாகிவிட்டது என்றும், அது என்றுமே அங்கு போனதில்லை என்றும் கூறியது. சௌக்கியமாக, சகலவித சுகபோகங்களுடன் பில்கிங்டன் தயவில் பாக்ஸ்வுட் பண்ணையில்தான் வசித்துவருகிறது என்றும், விலங்குப் பண்ணை யிலிருந்து ஓடிய நாள் முதல் இன்று வரை பில்கிங்டனிடம் பென்ஷன் பெற்றுக்கொண்டு, அவனுக்காகத் தான் பாடுபட்டுக் கொண்டு வருகிறது என்றும் நெப்போலியன் மறுபேச்சுக்கிடமே யில்லாமல் அடித்துக் கூறியது.

நெப்போலியன் தந்திரமாக பில்கிங்டனை ஏமாற்றி, அவன் வலையில் சிக்காதிருந்தது பற்றி மிருகங்கள் தனித்தனியே பாராட்டிக்கொண்டன. பில்கிங்டனிடம் சிநேகமாக இருப்பது போல இருந்து ஃபிரடெரிக்கிடம் இருபது பவுன்கள் அதிகமாகப் பணம் வாங்கிவிட்டது நெப்போலியன். அது மட்டுமின்றி அதன் ராஜதந்திர மேன்மைவேறு ஒரு விஷயத்தில் தெளிவாகியது என்றது ஸ்க்வீலர் பன்றி. பணம் தருவதாக சத்தியம் செய்து, ஒரு செக் என்கிற காகிதம் தருவதாக ஃபிரடெரிக் சொன்னானாம். "செக்கெல்லாம் வாங்கிக்கொள்ள முடியாது. பணமாக, ஐந்து பவுன் நோட்டுகளாக முழுப் பணத்தையும் உடனே தந்துவிட வேண்டும்" என்று நெப்போலியன் வற்புறுத்திக் கூறிவிட்டது. அந்தப் பணம் பூராவும் மரக்கட்டைகள் அகற்றப்படும் முன் கொடுக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தியது. ஃபிரடெரிக் உண்மையில் பணத்தை உடனேயே கொடுத்தும் விட்டான். அவன் கொடுத்த பணம் காற்றாடி இயந்திர சாமான்களை வாங்குவதற்குப் போதுமானதாக இருந்தது.

மரக்கட்டைகளை அவசர அவசரமாக அப்புறப்படுத்தினான் வாங்கியவன். வண்டிகள் போன பிற்பாடு, இன்னொரு பிரத்தி யேகக் கூட்டம் கூடியது. ஃபிரடெரிக் கொடுத்த பணத்தைப் பார்வையிடுவதற்காக, ஆனந்தச் சிரிப்பு முகத்தில் பொங்க இரண்டு மெடல்களையும் அணிந்துகொண்டு, மேடை மேல் வைக்கோலைப் பரப்பி அதன் மேல் சாய்ந்து கொண்டிருந்தது தலைவர் நெப்போலியன். பக்கத்தில் ஒரு அழகிய பீங்கான் கிண்ணத்தில் ஃபிரடெரிக் தந்த ஐந்து பவுன் நோட்டுகள் வைக்கப்பட்டிருந்தன. விலங்குகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து அந்தப் பணத்தைப் பார்த்தன; நின்று உற்றுப் பார்த்தன. பாக்ஸர் தன் முகத்தைப் பீங்கான் கிண்ணத்துப் பக்கம் கொண்டு போய் ஒரு மூச்சுவிட்டது; அந்த மூச்சுக் காற்றிலே மென்மையான, லேசான காகிதப் பணம் பறந்து விடும்போல, சலசலத்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு வேறு ஒரு ஆரவாரம் ஏற்பட்டது; பயங்கரமான ஆர்ப்பாட்டம் அது. முகம் வெளுக்க விம்பர் தன் சைக்கிளில் ஓடோடியும் வந்து, அத்தனை பணமும் கள்ள நோட்டுகள் என்று தெரிவித்தான். சைக்கிளை முற்றத்தில் போட்டுவிட்டு அவன் உள்ளே சென்ற ஒரு நிமிடத்திற்கெல்லாம் நெப்போலியன் ஆத்திரமாகக் கூச்சலிடுவது காதில் விழுந்தது. காட்டுத்தீ போல விஷயம் பண்ணையிலே ஒரு நிமிஷத்திற் கெல்லாம் பரவிவிட்டது. அனைத்தும் கள்ள நோட்டுகள்! அவை செல்லாது. மோசடி செய்து மரத்தை தட்டிக்கொண்டு போய் விட்டான் ஃபிரடெரிக்.

விலங்குகளை எல்லாம் ஒன்று கூட்டி நெப்போலியன் ஒரு பிரசங்கம் செய்தது. ஃபிரடெரிக்குக்கு மரணதண்டனை விதித்தது அது. அவனைப் பிடித்தவுடன் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பறையில் உயிரோடு போட்டுக் கொல்வது என்று தீர்ப்புக் கூறியது நெப்போலியன். இவ்வளவு அயோக்கியத்தனமான துரோகச் செயலுக்குப் பிறகு இனி மனிதர்களிடமிருந்து தீய செயல் எதையும் எதிர்பார்க்கலாம் என்று நெப்போலியன் மிருகங்களை எச்சரித்தது. வெகுநாட்களாக எதிர்பார்க்கப்பட்டிருந்த தாக்குதலை ஃபிரடெரிக்கும் அவன் வேலையாட்களும் உடனேயே தொடங்கிவிட்டால்கூட ஆச்சரியப்படுவதற்கில்லை என்றது நெப்போலியன். பண்ணையை நோக்கி வருகிற பாதைகளுக் கெல்லாம் காவலாளிகள் நியமிக்கப்பட்டனர். இதைத் தவிர பாக்ஸ்வுட்டுக்கு நூறு புறாக்கள் விசேஷ தூதர்களாக அனுப்பப் பட்டன. பில்கிங்டனுடன் இந்தச் சந்தர்ப்பத்தில் சிநேகமாக இருக்க முடியுமானால் அது நல்லது என்கிற

உத்தேசத்துடன் அவன் உறவை நாடித் தூது அனுப்பியது நெப்போலியன்.

மறுநாளே எதிர்பார்த்த தாக்குதலும் தொடங்கிவிட்டது. காலை உணவை அருந்திக்கொண்டிருந்த மிருகங்களிடம், ஃபிரடெரிக்கும் அவன் வேலையாட்களும் வெளிவாசல் கதவைத் தாண்டி பண்ணைக்குள் வந்துவிட்டார்கள் என்று காவல்காரர்கள் அறிவித்தார்கள். மிருகங்கள் மிகவும் தைரியமாகத்தான் போருக்குக் கிளம்பின. ஆனால், மாட்டுக்கொட்டில் சண்டையில் கிடைத்தது போலச் சுலபமாக வெற்றி கிடைக்கவில்லை அவர்களுக்கு. பதினைந்து மனிதர்கள் வந்திருந்தனர்; அவர்களிடம் பன்னிரண்டு துப்பாக்கிகள் இருந்தன; நூறு அடி தூரத்தில் விலங்குகள் வந்த வுடனேயே அவர்கள் கூட ஆரம்பித்துவிட்டார்கள். பயங்கர வெடிகளையும், குண்டுகளையும் மிருகங்களால் தாங்கமுடிய வில்லை. நெப்போலியனும் பாக்ஸரும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தும், விலங்குகள் பின் வாங்கின; துரத்தியடிக்கப் பட்டன. பல மிருகங்களுக்குக் காயங்கள் பட்டன. பண்ணை வீட்டுக்குள்ளும் கொட்டகைக்குள்ளும் புகுந்துகொண்டு, மனிதர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை ஓட்டைகள் வழியாகக் கவனித்தன. பண்ணை முழுவதும், காற்றாடி இயந்திரக் கட்டிடம் உட்பட எல்லாமே விரோதிகள் கையில் சிக்கிவிட்டது.

அந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்வது என்று நெப்போலி யனுக்குத் தெரியவில்லை. வாலை ஆட்டிக்கொண்டு, குறுக்கும் நெடுக்கும் நடந்தது நெப்போலியன்; ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை அது. பாக்ஸ்வுட் பக்கம் மிருகங்கள் அடிக்கடி ஆசையுடன் திரும்பித் திரும்பிப் பார்த்தன. சமயத்தில் பில் கிங்டனும் அவன் ஆட்களும் உதவிக்கு வந்தால், எவ்வளவோ நன்றாக இருக்கும்! தோல்வியை வெற்றியாக மாற்றிவிடலாம்; ஆனால், அந்த சமயம் பில்கிங்டனிடம் முதல்நாள் தூதர்களாக அனுப்பப்பட்டிருந்த நூறு புறாக்களும் திரும்பி வந்தன. பில்கிங்டன் தகவல் அனுப்பியிருந்தான். “உங்களுக்கு இதுதான் சரி, இன்னமும் வேண்டும்” என்று.

ஃபிரடெரிக்கும் அவன் மனிதர்களும் காற்றாடி இயந்திரக் கட்டிடத்தைச் சுற்றி நின்றார்கள். விலங்குகள் அவர்களைக் கவனித்தன. “ஐயோ! ஐயோ” என்று செயலாற்ற வகையில்லாமல் பரிதாபமாக முணுமுணுத்தன அவை. இரண்டு மனிதர்கள் கோடரிகளுடனும் சுத்திகளுடனும் காற்றாடி இயந்திரத்தை அணுகினார்கள். கட்டிடத்தை இடிக்கக் கிளம்பினார்கள் அவர்கள்.

“முடியாது?” என்றது நெப்போலியன். “அவர்களால் இடிக்க முடியாத அளவுக்குக் கனமாகச் சுவர்களைக் கட்டியிருக்கிறோம் நாம். ஒருவாரத்தில் கூட அவர்களால் அதை அசைக்க முடியாது! தைரியமாயிருங்கள் தோழர்களே!” நெப்போலியன் முணு முணுத்தது.

ஆனால், அந்த மனிதர்களின் செயல்களை பெஞ்சமின் உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தது. காற்றாடி இயந்திரக் கட்டிடத்திற்கடியிலே, அந்த இரண்டு மனிதர்களும் ஒரு ஓட்டை போட்டார்கள். பெஞ்சமின் மெதுவாக, ஏதோ வேடிக்கை பார்த்து ஆனந்திப்பது போன்ற ஒரு ஆர்வத்துடன் சொல்லிற்று.

“அப்படித்தான் நான் நினைத்தேன். அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது தெரியவில்லையா? அந்த ஓட்டையில் வெடிமருந்தைத் திணிக்கப் போகிறார்கள்.”

பீதியடைந்த நிலையில் விலங்குகள் காத்திருந்தன. சில நிமிடங்களுக்கெல்லாம் மனிதர்கள் நான்கு பக்கமும் சிதறி ஓடி ஒளிந்துகொண்டார்கள். பிறகு அங்கே காது செவிடுபடும் படியாகப் பிரமாண்டமான ஒலி ஒன்று கேட்டது. புறாக்கள் காற்றிலே பறந்தன. நெப்போலியனைத் தவிர மற்ற மிருகங் களெல்லாம் குப்புறப்படுத்து முகத்தை மூடிக்கொண்டன. அவை எழுந்து பார்த்தபோது, எதுவும் கண்ணில் படாமல் ஒரே புகைப் படலமாக இருந்தது. காற்றிலே புகைப்படலம் மறைந்தபின் பார்த்தபோது காற்றாடி இயந்திரக் கட்டிடம் அங்கில்லை என்பது தெரிந்தது. கட்டிடம் தகர்ந்து இடிந்துவிட்டது!

இதைப் பார்த்த மிருகங்களுக்கு ரோஷமும் ஆத்திரமும் தைரியமும் அளவுகடந்து வந்தது. பயமும், கோழைத்தனமும், ஒன்றும் செய்யமுடியாது என்கிற மனோபாவமும் உடனே மறைந்துவிட்டது. எவ்வளவு சிரமப்பட்டுக் கட்டிய கட்டிடத்தை தரைமட்டமாக்கிவிட்டர்கள் இந்த மனிதர்கள்! வஞ்சம் தீர்த்துக் கொள்வோம் என்று மிருகங்கள் ஒரு குரலாகக் கூக்குரலிட்டுக் கொண்டு பாய்ந்து தாக்கின. விலங்குகள் எல்லாம் ஒரே சமயத்தில் ஒன்றுகூடிப் பாய்ந்து மனிதர்களைத் தாக்கின. துப்பாக்கிக் குண்டுகளையோ, வெடிகளையோ அவை இந்தத் தடவை லட்சியமே செய்யவில்லை. மிகவும் கோரமான யுத்தம் அது. மனிதர்கள் திரும்பத் திரும்ப துப்பாக்கிகளால் சுட்டார்கள். விலங்குகள் நெருங்கிவந்தபோது சாட்டைகளாலும் தடிகளாலும் அடித்தார்கள். ஒரு பசு, மூன்று ஆடுகள், இரண்டு வாத்துகள் அங்கேயே செத்து விழுந்தன.

பின்னாலிருந்துகொண்டு யுத்தத்தை நடத்திக்கொண்டிருந்த

நெப்போலியனின் வாலைக்கூட ஒரு துப்பாக்கிக் குண்டு பதம் பார்த்துவிட்டது. மனிதர்கள் கட்சியிலும் சேதம் ஏற்படாமல் இல்லை. பாக்ஸரின் உதையால் மூவருக்கு மண்டை உடைந்து விட்டது. ஒரு பசு ஒருவனை வயிற்றில் குத்திக் கிழித்துவிட்டது. ஜெஸ்ஸியும் ப்ளூபெல்லும் சேர்ந்துகொண்டு ஒருவனின் கால்சட்டையைப் பல்லால் கடித்திழுத்தன. அவன் அநேகமாக நிர்வாணமாகிவிட்டான் என்றுதான் சொல்லவேண்டும். நெப்போலியனின் காவல்படை வீரர்களாகிய ஒன்பது வேட்டை நாய்களும் வேலி ஓரமாக மறைவாகப் போய், சமயம் பார்த்து பின்பக்கத்திலிருந்து தாக்கின. அவை எழுப்பிய ஊளைகளைக் கேட்டே மனிதர்கள் பயந்து போனார்கள். எதிரிகள் தங்களைச் சுற்றி வளைத்துக்கொண்டு விடப் போகிறார்களே என்று பயந்து ஃபிரடெரிக் தன் ஆட்கள் கலைந்துவிடலாம் என்று உத்தர விட்டான். எல்லோரும் ஓடிவிடுவதுதான் நல்லது என்றான். அடுத்த நிமிடமே கோழை மனிதர்கள் விழுந்தடித்துக்கொண்டு தலைதெறிக்க ஓடினார்கள். வயல் கோடி வரையில் அவர்களைத் துரத்திக்கொண்டு ஓடின விலங்குகள். முள்வேலிகளைத் தாண்டிக் குதிக்க மனிதர்கள் முயன்றுகொண்டிருந்தபோது, நாலு உதை கொடுத்து அவர்களை வழியனுப்பிவிட்டு வந்தன விலங்குகள்.

மிருகங்கள் யுத்தத்தில் வெற்றிபெற்றுவிட்டன. ஆனால், அவற்றின் உடலெல்லாம் ரத்தம் வழிந்தோடிக்கொண்டிருந்தது. மிகவும் களைப்படைந்துவிட்டன. நொண்டி நொண்டிக் கொண்டே அவை பண்ணை வீட்டு முன் முற்றத்துக்கு வந்தன. யுத்த களத்தில் இறந்துகிடந்த தங்கள் தோழர்களைப் பார்த்துக் கண்ணீர்விட்டன அவை. காற்றாடிக் கட்டிடம் நின்ற இடத்தில் துயரம் நிறைந்த உள்ளத்துடன் சிறிதுநேரம் மௌனமாக நின்றன. சொல்வதற்கு எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆமாம்! காற்றாடிக் கட்டிடம் போய்விட்டது! அது இருந்த இடமே தெரியாமல் போய்விட்டது. அவர்கள் பாடுபட்டதின் சின்னமே தெரியாமல் போய்விட்டது. அஸ்திவாரம் கூடப் பெயர்ந்துவிட்டது. இந்தத் தடவை பழைய கற்களைக் கூடக் காணமுடியவில்லை. மீண்டும் கட்டிடத்தை எழுப்ப, மறு படியும் அவற்றை உபயோகப்படுத்த முடியாது. நூறு இருநூறு அடி தூரத்துக்குக் கற்கள் தெரித்துப்போய்ப் பொடிப்பொடியாகி

உதிர்ந்துகிடந்தன. காற்றாடி இயந்திரக் கட்டிடம் என்று ஒன்று அங்கிருந்த அறிகுறியே தெரியவில்லை.

பண்ணைக் கட்டிடங்களை அணுகியபோது, யுத்தத்தின் போது எங்கேயோ மாயமாக மறைந்து, யார் கண்ணிலும் படாமல் போய்விட்ட ஸ்க்வீலர் விலங்குகளை எதிர்கொண்டழைக்கக் குதித்துக் குதித்து ஓடிவந்தது. அதன் முகத்திலே மகிழ்ச்சியும் ஆனந்தமும் தாண்டவமாடின. பண்ணைக் கொடிமர மூலை யிலிருந்து வேட்டுச் சப்தம் மிருகங்கள் காதில் விழுந்தது.

“எதற்காக வெடி வைக்கிறார்கள்?” என்று கேட்டது பாக்ஸர்.

“நமது வெற்றியைக் கொண்டாடுவதற்காக?” என்றது ஸ்க்வீலர் பன்றி.

“என்ன வெற்றி?” என்று கேட்டது பாக்ஸர். அதன் முழங் கால்களிலிருந்து ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது. அதன் லாடங்களில் ஒன்று பெயர்ந்துவிட்டது. கால் குளம்பு ஒன்று உடைந்து வலித்தது. பின்னங்கால்களில் அரை டஜன் குண்டுத் துணுக்குகள் வேறு புகுந்துகொண்டு தொல்லைகள் தந்தன.

“தோழரே! என்ன வெற்றியா? எதிரிகளை நமது மண்ணிலிருந்து விரட்டி ஓட்டவில்லையா நாம்? விலங்குப் பண்ணையின் மண் புனிதமானது அல்லவா?”

“காற்றாடி இயந்திர அஸ்திவாரத்தையே தீர்த்துவிட்டார்களே அவர்கள். இரண்டு வருடங்கள் கஷ்டப்பட்டோமே அதை நிர்மாணிக்க?” என்று பாக்ஸர் கேட்டது.

“அதனாலென்ன? இன்னொரு கட்டிடம் கட்டிக்கொள்வோம் நாம். விருப்பமிருந்தால் ஆறு காற்றாடிகள் அமைத்துக் கொள்ளலாம். நாம் சாதித்துவிட்ட வீரத்தனமான செயலை, அடைந்த மாபெரும் வெற்றியை, நீர் சரிவர உணரவில்லை என்பது தெரிகிறது. நாம் நிற்கிற இந்த மண்ணை எதிரி ஆக்கிர மித்துக் கொண்டிருந்தான். இப்போது, தலைவர் நெப்போலியனின் தலைமைத் திறத்தால், நாம் அதை மீட்டுவிட்டோம். மகத்தான வெற்றியல்லவா இது?”

“நம்மிடம் இருந்ததை நாம் மீண்டும் வென்றுவிட்டோம்” என்றது பாக்ஸர்.

“அதுதான் நமது வெற்றி” என்றது ஸ்க்வீலர்.

நொண்டிக்கொண்டே பாக்ஸர் முற்றத்திற்குள் வந்தது. அதன் காலில் தைத்திருந்த ரவை குண்டுகளால் ஏற்பட்ட வலி பொறுத்துக் கொள்ள முடியாததாக இருந்தது. மீண்டும்

காற்றாடி இயந்திரக் கட்டிட வேலை தொடங்கியாக வேண்டும். அந்த மகத்தான காரியத்தைச் சாதிக்கக் கற்பனையில் அது தன்னையே தயார் செய்துகொண்டது. ஆனால், தனக்குப் பதினோரு வயதாகி விட்டது என்பது முதல் தடவையாக அன்று தான் அதற்குத் தெரிய வந்தது. தனக்கு முன்போல பலம் இல்லை என்பதும் அன்றுதான் அது உணர்ந்தது.

கொடிக் கம்பத்தில் பச்சைக்கொடி உயரப் பறந்து கொண்டிருந்தது. துப்பாக்கி வேட்டு ஏழுதரம் வெடிக்கப்பட்டது. நெப்போலியன் ஒரு உருக்கமான ஒரு பிரசங்கம் செய்தது. மகத்தான சாதனைக்குத் தன் பாராட்டை நெப்போலியனே நேரில் தெரிவித்தது. இதையெல்லாம் கேட்டபின் விலங்குகளுக்கும் தாங்கள் ஏதோ பிரமாதமான ஒரு காரியத்தைச் செய்து முடித்து விட்டதாகத்தான் தோன்றியது. வெற்றி என்றால் சாதாரண வெற்றியா அது? யுத்தத்தில் உயிர் துறந்த மிருகங்களுக்குச் சவ அடக்கம் உரிய மரியாதைகளுடன், கௌரவமாகச் செய்யப் பட்டது. சவ வண்டியை பாக்ஸரும் க்ளோவரும் இழுத்துச் சென்றன. ஊர்வலத்தின் தலைப்பில் நெப்போலியனே நடந்தது. கொண்டாட்டங்கள் இரண்டு நாட்கள் முழுவதும் நடை பெற்றன. பாட்டுகள், பிரசங்கங்கள், வேட்டுவைத்தல் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வெகு சிறப்பாக நடந்தன. ஒவ்வொரு மிருகத்துக்கும் ஒவ்வொரு ஆப்பிள் இனாமாகத் தரப்பட்டது. ஒவ்வொரு பறவைக்கும் இரண்டு ஆழாக்கு தானியம் இனாம் தரப்பட்டது. நாய்களுக்கு தலா மூன்று மூன்று பிஸ்கோத்துகள் அளிக்கப்பட்டன. அந்த யுத்தத்துக்குக் ‘காற்றாடி இயந்திரக் கட்டிட யுத்தம்’ என்று பெயரிடப்பட்டிருப்பதாக அறிவிக்கப் பட்டது. ஒரு புதுமெடல் ஒன்று உற்பத்தி செய்து, அதைத் தனக்கே அளித்துக் கொண்டுவிட்டதாக நெப்போலியன் தெரிவித்தது. அதன் பெயர் பச்சைக்கொடி மெடல். இந்தப் பேரின்பத்தில், கள்ள நோட்டுகளால் ஏமாற்றப்பட்ட விஷயத்தை விலங்குகள் மறந்திருந்தன.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு, பண்ணை வீட்டு அடித்தளத்திலே ஒரு பீப்பாய் சாராயம் இருந்ததைப் பன்றிகள் கண்டுபிடித்தன. முதலில் வீட்டைப் பிடித்துக்கொண்டபோது அவை அதைப் பார்க்கவில்லை. பண்ணை வீட்டிலிருந்து அன்றிரவு - ஒரே பாட்டும் கூத்தும் களியாட்டமுமாக இருந்தது. ‘இங்கிலாந்தின் விலங்குகள்’ என்கிற பாட்டுக்கூடக் காதில் விழுந்தமாதிரி இருந்தது. ஒன்பதரை மணிக்கு நெப்போலியன், ஜோன்ஸின் பழைய தொப்பி ஒன்றை அணிந்துகொண்டு, வீட்டுக் கொல்லைக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்து, முற்றத்தில் நூறுதரம் ஓடியாடிக் கூத்தடித்து விட்டு,

உள்ளே மறைந்துவிட்டதை சில மிருகங்கள் கவனித்தன.

ஆனால், மறுநாள் காலையில் வெகுநேரமாகியும் பன்றிகள் எதுவும் எழுந்திருக்கவேயில்லை. ஒன்பது மணிக்கு மேல்தான் ஸ்க்வீலர் தன் தலையை இரண்டு கைகளாலும் தாங்கிக்கொண்டு, தள்ளாடித் தள்ளாடி வெளியே வந்தது. எதையோ பறிகொடுத்த மாதிரி முகத்தை வைத்துக்கொண்டு, கண்கள் ஒளியற்றுப்போக, வால் மிகவும் துயர பாவத்தில்தொங்க அது வெளியே வந்தது. அதற்கு உடம்பு சரியாக இல்லை என்பது தெளிவாகவே தெரிந்தது. மிருகங்களைக் கூட்டி அது பயங்கரமான ஒரு தகவலைத் தெரி வித்தது. “நெப்போலியன், தலைவர், தோழர் நெப்போலியன் சாகக்கிடக்கிறது.”

எல்லா மிருகங்களும் துயரக் குரலில் அழுதன. பண்ணை வீட்டுக்கு வெளியே வைக்கோலைப் பரப்பி, கால் சப்தம் கேட்காதிருக்கும் பொருட்டு அதன்மேல் நடந்தன மிருகங்கள் எல்லாம். தலைவர் போய்விட்டால் எப்படித் தங்களால் சமாளிக்க முடியும் என்று கண்களில் நீர் ததும்ப ஒன்றை யொன்று கேட்டுக் கொண்டன. நெப்போலியனின் உணவில் யாரோ விஷத்தைக் கலந்துகொடுத்துவிட்டார்கள் என்ற வதந்தி பரவியது மிருகங் களிடையே. பதினொரு மணிக்கு ஸ்க்வீலர் வந்து இன்னொரு அறிக்கை வெளியிட்டது. மரணப் படுக்கையிலிருந்து நெப்போலியன் தன் கடைசி விருப்பத்தை மிருகங்களுக்கெல்லாம் தெரிவித்தது. அதை முக்கியமான விதியாக எல்லா விலங்குகளும் பின்பற்ற வேண்டும். விலங்குப் பண்ணையில் சாராயம் குடிக்கும் மிருகத்துக்கு மரணதண்டனை விதிக்கப்பட வேண்டும் என்று நெப்போலியன் விரும்பியது.

ஆனால், மாலையில் நெப்போலியனுக்கு உடம்பு குணமாக ஆரம்பித்துவிட்டது. மறுநாள் காலையில் ஸ்க்வீலர் வந்து, தங்கள் தலைவர் இந்தத் தடவை மரணத்தையும் வென்று விட்டதாக அறிவித்தது. அன்று மாலையிலேயே நெப்போலியன் வழக்கமான அலுவல்களை மீண்டும் கவனிக்கத் தொடங்கி விட்டது. மறுநாள், விம்பர் மூலமாக நெப்போலியன், சாராயம் காய்ச்சுவது, வடிகட்டுவது பற்றிப் பல நூல்கள் வாங்கிவரச் சொல்லியிருப்பதாகத் தெரிந்தது. பழத் தோட்டத்துக்கு அப்பாலிருந்த ஒரு வயல் வெளியை, வேலைக்கு லாயக்கற்ற கிழட்டு மிருகங் களின் உணவுக்கான புல்தரையாக ஒதுக்கி வைப்பது என்று முன்னர் ஏற்பாடாகியிருந்தது. அந்த வயல் வெளிக்கு இப்போது வேறு அவசரத் தேவையிருப்பதாகவும், அதில் பார்லி விதைக்கப் போவதாகவும் அறிவித்தது நெப்போலியன். புது விதை போடு முன் அதை உழுது பண்செய்ய வேண்டுமென்றது. நிலம் சரிப்

படுத்தியபின் பார்லியும் விதைக்கப்பட்டது.

சற்றேறக்குறைய இந்தச் சமயத்தில் நடந்த ஒரு சம்பவம் மிகவும் அதிசயமானதாக இருந்தது. ஆனால், அதை எந்த மிருகத்தாலும் சரிவர அறிந்துகொள்ளத்தான் இயலவில்லை. ஒருநாள் இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு தடாலென்று துப்பாக்கி வேட்டு வெடித்த மாதிரி ஒரு சப்தம் கேட்டது. மிருகங்கள் எல்லாம் ஓடிச்சென்று பார்த்தன. நல்ல நிலா இருந்தது அன்றிரவு. பெரிய கொட்டகையின் கோடிச் சுவரில் ஏழு விதிகளும் எழுதப் பட்டிருந்த இடத்துக்கு நேர் கீழே ஒரு ஏணி விழுந்து இரண்டாக உடைந்திருந்தது. ஸ்க்வீலர் பேச்சு மூச்சற்று மயக்கமாகத் தரையிலே கிடந்தது. ஒரு வாளியில் வெள்ளை வர்ணம் கொட்டி யிருந்தது. ஒரு பெரிய புருசும், ஒரு கைவிளக்கும் அதன் பக்கத்தில் கிடந்தன. நாய்கள் அங்கு ஸ்க்வீலரைக் காவல் காத்தன. அதனால் எழுந்து நடக்க முடிந்தவுடன், அவைகளை அழைத்துக்கொண்டு வீட்டுக்குள் போய்விட்டன. மிருகங்களில் எதற்கும், இதற் கெல்லாம் என்ன அர்த்தம் என்று கண்டுகொள்ள முடியவில்லை. கிழட்டு பெஞ்சமின் மட்டும் எல்லாவற்றையும் புரிந்துகொண்டது போலத் தலையை ஆட்டியது. ஆனால், அது ஒன்றும் சொல்ல வில்லை.

ஆனால், இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு முரியல் அந்த ஏழு விதிகளையும் ஒருதரம் வாசித்துக் கொண்டிருந்போது, விதிகளில் ஒன்றின் வாக்கியம் கொஞ்சம் மாறியிருப்பதுபோல ஞாபகமிருந்தது இதுதான்: “விலங்குகள் எதுவும் குடிக்கக் கூடாது.” இதில் இப்போது இரண்டு வார்த்தைகள் அதிகமாக இருந்தன. அவற்றை மிருகங்கள் இத்தனை நாளும் மறந்து விட்டனபோலும். விதி சொன்னது என்னவென்றால், “விலங்குகள் எதுவும் அளவுக்கு மீறிக் குடிக்கக்கூடாது!”

# 9

பாக்ஸரின் உடைந்த குளம்பு சரியாவதற்குப் பல நாள் பிடித்தது . வெற்றி விழா கொண்டாட் டங்கள் முடிந்த மறுநாளே காற்றாடி இயந் திரக் கட்டிட வேலை தொடங்கப்பட்டது . பாக்ஸர் ஒருநாள் கூட ஓய்வு எடுத்துக்கொள்ள மறுத்துப் பழைய மாதிரியே வேலையைத் தொடர்ந்து செய்து வந்தது . தனக்கு உடலில் நோவு இருப்பதை மற்ற மிருகங்கள் தெரிந்து கொள்ளக்கூடாது என்று பல்லைக் கடித்துக் கொண்டு பாடுபட்டது . க்ளோவரிடம் மட்டும் சாயங்கால வேளையில் ‘குளம்பு வலிக்கிறது ’ என்று ரகசியமாகச் சொல்லும் . க்ளோவர் பச்சிலைகளைக் கடித்துப் பக்குவப்படுத்தி பாக்ஸரின் காலில் வைத்துக் கட்டும் . அதுவும் பெஞ்சமினும் , பாக்ஸரைக் குறைவாக வேலை செய்யவும் , உடம்பை அதிகமாக அலட்டிக் கொள்ளாதிருக்கவும் தூண்டின . “குதிரைக்கு மூச்சு என்றும் இராது , அது ஒரு நாள் போய் விடும் ” என்ற பழமொழியை பாக்ஸருக்கு ஞாபகப்படுத்தியது க்ளோவர் . ஆனால் , பாக்ஸர் அதைக் காதில் போட்டுக்கொள்ள வில்லை .

வாழ்க்கையில் ஒரே ஆசைதான் இருந்தது அதற்கு. அது ஓய்வு எடுத்துக் கொள்ளும் முன் காற்றாடி இயந்திரக் கட்டிட வேலை துவங்கி கொஞ்சமாவது நடந்துவிடவேண்டும் என்பதுதான்.

ஆரம்ப நாட்களில், அதாவது விலங்குப் பண்ணையின் புரட்சிக்குப்பின், முதன் முதலாக விதிகள், சட்ட திட்டங்கள் எல்லாம் வகுக்கும்போது, குதிரைக்கும் பன்றிக்கும் ஓய்வுபெறும் வயது பன்னிரண்டு என்று தீர்மானிக்கப்பட்டது. பசுக்கள் பதினாலாவது வயதிலும், நாய்கள் ஒன்பதாவது வயதிலும், ஆடுகள் ஏழாவது வயதிலும், வாத்துகளும் கோழிகளும் ஐந்தாவது வயதிலும் ஓய்வு பெறலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. வயது வந்தவர்களுக்கு தாராளமாக உபகாரச் சம்பளம் அளிப்பது என்றும் தீர்மானாமாகியிருந்தது.

இதுவரை ஒரு மிருகம்கூட உபகாரச் சம்பளம் பெற்றுக் கொண்டு ஓய்வு பெறவில்லை. ஆனால், கொஞ்ச நாளாக ஓய்வு, உபகாரச் சம்பளம் என்கிற விஷயங்கள் மட்டும் அடிக்கடி மிருகங்களிடையே பேச்சில்

அடிபட்டன. முதலில், ஓய்வு பெற்ற மிருகங்களுக்கு என்று ஒதுக்கியிருந்த வயலில் இப்போது பார்லி விதைத்தாகி விட்டபடியால், பெரிய வயலில் ஒரு பகுதியை வேலி போட்டு புல் தரையாகவும், மேயும் இடமாகவும் ஒதுக்கி வைக்கப்படும் என்ற வதந்தி உலாவியது. குதிரைக்கு உபகாரச் சம்பளமாக ஒரு நாளைக்கு ஐந்து பவுண்டு தானியமும், பதினைந்து பவுண்டு புல்லும் தரப்படும். இது தவிர கேரட், காய்கறி முதலியன விடுமுறை நாட்களில் தரப்படும் என்று பேசிக் கொள்ளப்பட்டது. அடுத்த வருஷம் கோடையில் பாக்ஸருக்கு வயது பன்னிரண்டு அடைய இருந்தது.

இப்போது, வாழ்க்கை மிகவும் கடினமானதாகத்தான் இருந்தது. முந்திய மாரி காலம் போலவே இந்த மழைக்காலமும் கடுமையான குளிராகவே இருந்தது. உணவும் பற்றாக்குறை தான். மீண்டும் ஒருமுறை உணவு அளவுகளெல்லாம் குறைக்கப் பட்டன. நாய்களுக்கும் பன்றிகளுக்கும் தவிர மற்ற விலங்குகளுக் கெல்லாம் போதிய அளவு உணவு கிடைக்கவில்லை. எல்லா மிருகங்களுக்கும் ஒரே மாதிரியான அளவில் உணவு தருவது என்பது விலங்கு தத்துவத்துக்கு ஒத்துவராது என்று ஸ்க்வீலர் பல தரப்பட்ட புள்ளி விவர, தத்துவ தரிசன விளக்கங்களுடன் விலங்குகளிடம் ஸ்தாபித்தது. எது எப்படியானாலும், உணவு பற்றாக்குறை இல்லை என்பதை அது பல தரப்பட்ட புள்ளி விவரங்களைக் கொண்டு எடுத்துக்காட்டியது. குறைவாகத் தோன்றியதே தவிர உண்மையில் குறைவேயல்ல என்று ஆணித் தரமாக மெய்ப்பித்தது அது. தற்காலிகமாக ஏதோ ஒரு சிறு மாறுதல் தேவைபட்டுச் செய்திருப்பது உண்மைதான்; ஆனால், உணவு குறைந்திருப்பதாக ஏற்பட்டுவிடாது.

உணவு அளவில் ஒரு மாறுதல் என்று சொல்லலாமே தவிர, உணவு அளவில் குறைவு என்று ஸ்க்வீலர் தவறியும்கூட சொல்ல வில்லை. ஆனால், ஜோன்ஸின் நாட்களில் இந்த மாறுதல் கால அளவு உணவு கூட மிருகங்களுக்கு கிடையாது என்று பல புள்ளி விவரங்களைக் கொண்டு நிரூபித்தது ஸ்க்வீலர் பன்றி. மிக வெகு வேகமாக கீச்சுக்குரலில் புள்ளிகளை மிருகங்களுக்கு வாசித்துக் காட்டியது ஸ்க்வீலர். கொள்ளு, வைக்கோல், பீட்ரூட், கேரட் போன்ற உணவுகள் எல்லாம் ஜோன்ஸின் நாட்களில் கிடைத்ததைப் போல இரண்டு பங்கு இப்போது கிடைக்கிறது என்று ஸ்தாபித்தது ஸ்க்வீலர். ஜோன்ஸ் காலத்தைவிட இப்போது குறைவாகவே விலங்குகள் வேலை செய்கின்றன என்றும், பண்ணையில் ஈக்கள் முதலியவற்றின் தொல்லைகள் குறைந்துவிட்டன என்றும், குடிதண்ணீர் முன்னைவிட நல்லதாக இருக்கிறது என்றும், மிருகங்களின் ஆயுள் அதிகரித்துவிட்டது

என்றும், அவற்றின் குட்டிகள் சௌக்கியமாகக் குழந்தைப் பருவத்தைத் தாண்டி உயிர் வாழ்கின்றன என்றும், படுக்க வைக்கோலும் அதிகமாகக் கிடைக்கிறது என்றும் ஆணித்தரமாக மறுக்க முடியாதபடி, சொல்லியது ஸ்க்வீலர்: மிருகங்கள் எல்லாம் ஒவ்வொரு வார்த்தையையும் நம்பின. உண்மையைச் சொல்லப் போனால் ஜோன்ஸையோ, ஜோன்ஸின் காலத்து விஷயங்களோ அவற்றிற்கு அடியோடு மறந்துபோய்விட்டன.

இப்போது வாழ்க்கை கடினமாகவும் திருப்தியற்றதாகவும் உற்சாகமற்றதாகவும் இருக்கிறது என்பதை மட்டுமே அவை உணர்ந்தன. தற்போது அவை அடிக்கடி பசியுடனும் குளிருடனும் போராட வேண்டியிருந்தது. தூங்காத நேரமெல்லாம் இப்போது அவை ஓயாமல் உழைத்துக்கொண்டிருந்தன. அவ்வளவுதான் அவற்றிற்குத் தெரிந்த விஷயம். ஜோன்ஸ் காலத்தில் இன்னும் மோசமாகத்தான் இருந்திருக்கும். அப்படி நம்ப அவை தயாராகவும் இருந்தன. அப்படி நம்புவதில் ஒரு உற்சாகமும் கொண்டன அவை. தவிரவும் அந்தக் காலத்தில் விலங்குகளெல்லாம் மனிதனுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தன. இப்போது அவை சுதந்திரம் பெற்றுவிட்டன. அது பெரிய முக்கியமான விஷய மல்லவா? இந்த முக்கியமான வித்தியாசத்தை அடிக்கொருதரம் ஸ்க்வீலர் சுட்டிக்காட்டத் தயங்கவில்லை.

தவிரவும் இப்போது விலங்குகளின் எண்ணிக்கையும் அதிகரித்திருந்தது. இலையுதிர்க்காலத்தில் சற்றேறக்குறைய ஒரே சமயத்தில் நான்கு பெண் பன்றிகளும் குட்டிகள் போட்டன. அவைகள் முப்பத்தொரு குட்டிகள் போட்டன. பிறந்த குட்டிகள் கரும்புள்ளியும் வெள்ளைப் புள்ளியுமாக இருந்தன. பண்ணையிலே நெப்போலியனைத் தவிர வேறு ஆண் பன்றிகள் இல்லாததால் இந்தக் குட்டிகளின் தகப்பன் யார் என்பது பற்றிச் சந்தேகத்துக்கு இடமேயில்லை. சுண்ணாம்பும் கல்லும் வாங்க வசதி ஏற்பட்ட வுடன், பண்ணை வீட்டுத் தோட்டத்திலே ஒரு பள்ளிக்கூடம் கட்டப்படும் என்று அறிவிக்கப்பட்டது. தற்காலிகமாக பன்றிக் குட்டிகளுக்கு நெப்போலியனே பாடம் சொல்லித் தந்தது. பண்ணை வீட்டுச் சமையலறையில் வகுப்புகள் நடந்தன. அவை விளையாடத் தோட்டத்தைத் தாண்டி வெளியே செல்ல அனுமதிக்கப்படவில்லை. தவிரவும் பண்ணையிலிருந்த மற்ற மிருகங்களின் குட்டிகளுடன் விளையாட, பழக பன்றிக் குட்டிகள் அனுமதிக்கப்படவில்லை. சற்றேறக்குறைய இதே சமயத்தில்,

இன்னொரு விதியும் அமுலுக்கு வந்தது. பாதையிலே ஒரு பன்றி எதிர்ப்பட்டால் மற்ற எந்த மிருகமானாலும் அதற்கு வழிவிட்டு மரியாதையாக ஒதுங்கி நிற்கவேண்டும் என்பதுதான் அது. எந்தப் பன்றியும் விடுமுறை நாட்களிலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் தன் வாலில் பச்சை நிற ரிப்பன் ஒன்று கட்டிக்கொள்ளலாம். அந்த உரிமை அதற்கு உண்டு என்றும் அறிவிக்கப்பட்டது.

பண்ணைக் காரியங்கள் அவ்வருடம் வெற்றிகரமாகவே நடந்தன. ஆனால், பண்ணையிலே போதிய பணம்தான் இல்லை. கல், சுண்ணாம்பு, மணல் எல்லாம் தேவை. பள்ளிக்கூடம் கட்டுவதற்கு அவைகளை வாங்கியாகவேண்டும். காற்றாடி இயந்திரச் சாமான்கள் வாங்க மீண்டும் பணம் சேகரிக்கவேண்டும். வீட்டு விளக்குகளுக்கு எண்ணெய், மெழுகுவர்த்திகள் எல்லாம் வாங்கியாக வேண்டும். நெப்போலியனின் உபயோகத்துக் கென்று சர்க்கரை வாங்கவேண்டும். (மற்ற விலங்குகள் சர்க்கரை உபயோகப்படுத்தக் கூடாது: உபயோகப்படுத்தினால் அவை அதிகமாகக் கொழுத்துப் போய்விடும் என்று விதி ஏற்பட்டிருந்தது.) மற்றும் பண்ணைக்குத் தேவையான தளவாடங்கள், ஆயுதங்கள், ஆணிகள், கயிறு, எரிப்பதற்குக் கரி, கம்பி, இரும்பு, நாய் பிஸ்கோத்துகள் முதலியனவும் வாங்கியாக வேண்டும். வைக் கோல் போர் ஒன்றும், அறுவடையான உருளைக்கிழங்கில் ஒரு பகுதியும் விற்கப்பட்டன. விற்பனைக்குக் கொடுக்கும் முட்டைகள் ஐநூறிலிருந்து அறுநூறாக உயர்த்தப்பட்டன. அந்த வருடம் இட்ட முட்டைகளில் விற்கப்படாமல் குஞ்சுகளானவை மிகவும் சொற்பமே. பண்ணையிலே கோழிகளின் எண்ணிக்கை வெகு வாகக் குறைந்துவிடும்போல இருந்தது.

டிசம்பரில் குறைக்கப்பட்ட உணவு அளவு பிப்ரவரியில் மீண்டும் குறைக்கப்பட்டது. விளக்குகளுக்கு எண்ணெய் வீணாகச் செலவாகிறது. வீட்டுக்கு வெளியே மிருகங்கள் படுத்துறங்கும் இடங்களில் விளக்குகள் எரியக்கூடாது என்று நெப்போலியன் உத்தரவிட்டது. ஆனால், பன்றிகள் சௌகரியமாகத்தான் இருந்தன. அவை தின்று கொழுத்துக்கொண்டிருக்கிற மாதிரி தான் தோன்றியது. பிப்ரவரி மாதக்

கடைசியில் ஒருநாள் மாலையில் ஏதோ ஒரு சமையல் வாசனை பண்ணை பூராவும் பரவி எல்லோருக்கும் நாக்கில் நீர் ஊறச் செய்தது. அதுவரை விலங்குகள் அந்த மாதிரி வாசனையை முகர்ந்ததே கிடையாது. ஜோன்ஸ் காலத்தில்கூட உபயோகப்படாமல் கிடந்த சாராயம் காய்ச்சும் கிடங்கிலிருந்து வந்தது. அந்த வாசனை பார்லி கொதிக்கும் வாசனை என்று யாரோ சொன்னார்கள். பசியுடன், நாக்கில் நீர் ஊற, காற்றில் வந்த அந்த வாசனையை நுகர்ந்தன மிருகங்கள். தங்களுக்குத்தான் ஏதாவது விசேஷமாகத் தயாராகிறதோ என்று ஆச்சரியப்பட்டு, ஆசையுடன் காத்திருந்தார்கள். ஆனால், அவற்றிற் கென்று விசேஷமாக ஒன்றும் கொடுக்கப்படவில்லை.

அடுத்த ஞாயிறன்று கொட்டகையில் மிருகங்கள் கூடிய போது, இனிமேல் பன்றிகளுக்கு மட்டும் தினந்தோறும் பார்லி அளிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது. வேறு எந்த விலங்கும் பார்லி உபயோகிக்கக்கூடாது என்றும் அறிவிக்கப்பட்டது. பழத் தோட்டத்துக்கு அப்பாலிருந்த வயலில் இனி பார்லியைத் தவிர வேறு எதுவும் பயிரிடப்படமாட்டாது. இத்துடனில்லாமல் தினமும் பன்றிகளுக்கு ஒரு கோப்பை பீர் தரப்படுவதாக ஒரு செய்தியும் விலங்குப் பண்ணையிலே பரவியது. நெப்போலி யனுக்கு மட்டும் தினமும் அரை லிட்டர் பார்லி பீர் கொடுக்கப் பட்டது என்றும் தெரியவந்தது. அந்த பீரை நெப்போலியன் தினமும் பீங்கான் பாத்திரத்தில்தான் சாப்பிட்டு வந்தது என்றும் தெரியவந்தது.

மிகமிகக் கடினமான வேலைகள் இருந்தன. எனினும், இப்போது விலங்குகள் வாழ்க்கையிலே ஒரு புது கௌரவமும், பெருமையும் பெற்றிருந்தன என்பதால் வாழ்க்கை சந்தோச மாகவே இருந்தது. எப்போதும் இல்லாத ஒரு புது மேன்மை உணர்ச்சியுடன் மிருகங்கள் வாழ்ந்தன. பாட்டுக் கச்சேரிகள், பிரசங்கங்கள், ஊர்வலங்கள் எல்லாம் இப்போது அதிகமாக இருந்தன. வாரத்தில் ஒருநாள் மிருகங்கள் தாமாகக் கூடி கொண்டாட்டங்கள் நடத்தவேண்டும் என்று நெப்போலியன் உத்தரவிட்டிருந்தது. இப்படிக் கொண்டாட்டங்களில் கலந்து கொள்ளாதவர்களுக்குப் பன்றிகள் கொடுமையான தண்டனைகள் விதித்தன. விலங்குப் பண்ணையின் சாதனைகளைப் பற்றிப் பாராட்டுவதற்காகவே இந்தக் கூட்டங்கள் கூடின.

குறிப்பிட்ட ஒரு நேரத்தில் மிருகங்கள் எல்லாம் தங்கள் தங்கள் அலுவல்களை அப்படியே விட்டுவிட்டுவந்து ஒன்றுகூடி, இராணுவ அணிவகுப்பு முறையில், வரிசையாகப் பண்ணையைச் சுற்றிச் சுற்றி வரவேண்டும். பன்றிகள் முதலில் போகும். பிறகு குதிரைகள், பசுக்கள்,

அடுத்து ஆடுகள், அதற்கப்பால் கோழிகளும் வாத்துகளும். இருமருங்கிலும் வேட்டை நாய்கள் உடன் வரும். எல்லாவற்றிற்கும் தலைமை வகித்து கட்டியம் கூறிக் கொண்டு, நெப்போலியனின் கருப்புச் சேவல் செல்லும். பாக்ஸரும் க்ளோவரும் பெரிய பேனர் ஒன்றை உயர்த்தித் தூக்கிச் செல்லும். அந்த பேனர் துணியில் அழகாகக் குளம்பும் கொம்பும் பொறித் திருக்கும்; அதன்கீழ் "தோழர் நெப்போலியன் வாழ்க!" என்று எழுதியிருக்கும். ஊர்வலக் கொண்டாட்டத்துக்குப் பிறகு நெப்போலியனைப் போற்றிப் புகழ்ந்து பாட்டுகள் படிக்கப் படும். வழக்கமாக ஸ்க்வீலர் பன்றி விலங்குப் பண்ணையில் உணவு நிலை இப்போது எப்படி உயர்ந்து நன்றாக இருக்கிறது என்று ஏராளமான புள்ளிவிவரங்களுடன் ஒரு பிரசங்கம் நிகழ்த்தும். புதிதாக இந்தப் பருவத்தில் உணவு உற்பத்தி எவ்வளவு சதவிகிதம் பெருகியிருக்கிறது என்பதை அது எடுத்துச் சொல்லும்.

சில சமயம் இந்தச் சந்தர்ப்பங்களில் துப்பாக்கி வேட்டு வெடிப்பதும் உண்டு. இந்தக் கூட்டங்களில் அதிக ஆர்வம் காட்டிய மிருகங்கள் ஆடுகள்தான். யாராவது எதையாவது பற்றி விவாதித்துக் குறைசொல்ல ஆரம்பித்தால், ஆடுகள் கோஷ்டியாக, "இரண்டு கால் கெட்டது; நாலு கால் நல்லது" என்று சேர்ந்தாற் போலப் பத்து நிமிடம் பாடி, விவாதமோ சர்ச்சையோ இல்லாமல் செய்துவிடும். மொத்தத்தில் சொல்லப் போனால் இந்தக் கூட்டங்கள் உற்சாகம் தருபவையாகத்தான் இருந்தன. அவை யாருக்கும் அடிமைப்பட்டிருக்கவில்லை. தாங்களே தங்களுக்கு எஜமானர்கள் என்பதை ஞாபகப்படுத்தி, மனத்துக்கு உற்சாகம் தருவதற்கு இந்தக் கூட்டங்கள் பெரிதும் பயன்பட்டன. அவை பட்டபாடுகளெல்லாம், செய்த வேலைகள் எல்லாம், தங்கள் லாபத்துக்காகவே அன்றிப் பிறர் யாருடைய லாபத்துக்காகவும் அல்ல. பாட்டுகள், ஊர்வலங்கள் ஸ்க்வீலர் பன்றியின் புள்ளி விவரங்கள், பிரசங்கம், துப்பாக்கி வேட்டு, சேவலின் கட்டியம் கூறல், பறக்கும் பேனர்க் கொடி, எல்லாமாகச் சேர்ந்து வயிறு காய்வதை மறக்க வைக்க உபயோகப்பட்டன; இந்த ஆர்ப் பாட்டத்தில் கொஞ்ச நேரமாவது பசியை மறந்திருக்க முடிந்தது என்பது விசேஷம்தானே!

ஏப்ரலில் விலங்குப் பண்ணை குடியரசு என்று அறிவிக்கப் பட்டது. அக்குடியரசு நாட்டுக்குத் தலைவர் ஒருவரைத் தேர்ந் தெடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஒரே ஒரு அபேட்சகர் தான் அப்பதவிக்கு போட்டியிட்டார். நெப்போலியன்தான் அது. ஆகவே ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அதே தினத் தன்று, ஸ்நோபாலின் பழைய துரோகச் செயல்களை ஐயந்திரிபற நிரூபிக்கப் புது சான்றுகள் பல, புதுக் கடிதங்கள் பல அகப் பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டது. ஜோன்ஸுடன்

ஸ்நோபால் செய்துகொண்ட ஒப்பந்தம் பற்றி முழு விவரங்களும் கிடைத்து விட்டன. அதிலிருந்து தெரிந்ததாவது: முன்னர் மிருகங்கள் நினைத்தபடி தந்திரமாக மாட்டுக்கொட்டில் யுத்தத்தில் மிருகங்களைத் தோற்கடிக்க நினைத்ததுடன் நின்று விடவில்லை ஸ்நோபால். அது உண்மையில் எதிர்க்கட்சிக்குத் தலைமை தாங்கியே விலங்குப் பண்ணைமேல் யுத்தம் செய்தது என்பது மறுக்கமுடியாத காரணங்களால் இப்போது தெரிந்துவிட்டது. ஜோன்ஸ் கட்சியிலிருந்நது சண்டையிட்டது மட்டுமல்ல; உண்மையில் அதுவேதான் ஜோன்ஸ் கட்சியில் முன்னின்று மிருகங்களுக்கு எதிராக யுத்தத்தை நடத்தியது. “மனிதகுலம் வாழ்க!” என்று கோஷமிட்டுக்கொண்டு, மனிதர் கோஷ்டிக்குத் தலைமை வகித்து நடத்தியது ஸ்நோபால்தான். ஸ்நோபாலின் முதுகில் அன்று காயங்கள் ஏற்பட்டு ரத்தம் வழிந்ததே, அது எப்படி ஏற்பட்டது தெரியுமா? யுத்த ஆரம்பத்தில் நெப்போலியன் ஸ்நோபாலின் மேல் பாய்ந்து, முதுகில் கடித்து, ரத்தம் பெருகச் செய்ததால் ஏற்பட்ட காயங்கள் அவை. மிருகங்களில் வயதான வற்றிற்கு இதெல்லாம் சரிவர ஞாபகம் இருக்கலாம் இன்னமும்!

பல வருடங்கள் எங்கேயோ கண்காணாமல் போய்விட்ட மோஸஸ் என்ற காகம் அந்த வருடம் நடுக் கோடையில் திடீரென்று வந்து சேர்ந்தது. அது சிறிதும் மாறவில்லை. இப்போதும் ஒரு வேலையும் செய்யவில்லை அது. இன்னமும் பழைய மாதிரியே அது கற்கண்டு மலையைப் பற்றியும் அதன் ஆனந் தங்களைக் பற்றியும் பேசியது. ஒரு மரக்கிளையில் உட்கார்ந்து கொண்டு, இறக்கைகளைப் படபடவென்று அடித்துக் கொண்டு, கேட்பவரிடம் மணிக்கணக்காகக் கதைகளை அளக்கும் அது. நீண்ட கரிய மூக்கை மேலே உயர்த்திக் காட்டிக் கொண்டு அது சொல்லும்: “தோழர்களே, அங்கே அதோ அங்கே, மேலே, அதோ தெரிகிற கருமேகத்துக்கும் மேலே, அப்பால் இருக்கிறது கற்கண்டு மாமலை. அங்கு வேலைகளே கிடையாது. இங்கு வேலை செய்து அலுத்த விலங்குகள் எல்லாம் அங்கு நிம்மதியாக, ஆனந்தமாக இருக்கலாம். சொர்க்கபூமி அது. ஆனந்தமான நாடு.” இவ்விதமாகச் சொல்லும், ஒரு சமயம் உயரப்பறக்கும் போது அந்த மலையைத் தான் பார்த்ததாகக்கூட அது சொல்லியது. எல்லையற்ற புல்லும், கொள்ளும்,

தானியங்களும், வைக்கோலும் அங்கே இருக்கிறது என்றது. வயிறாரத் தின்னுவதை யாரும் தடுப்பதில்லை என்றது. “பசுமையான இலைகள் ஏராளமாக இருந்தன. வேலிகளிலே தின்பண்டங்களும் சர்க்கரைக் கட்டிகளும் காய்த்துக் குலுங்கின” என்றது. மிருகங்களில் பலவும் அது சொல்வதை நம்பின. நம்புவதற்கு அவை தயாராக இருந்தன. அதற்குக் காரணம் இதுதான். இப்போது இந்த விலங்குகளின் வாழ்க்கை கடினமான வேலைகளும் தீராத பசியும் நிறைந்ததாக இருந்தது. வேறு எங்காவது ஒரு உலகத்தில் இதைவிடச் சிறந்ததாக ஒரு வாழ்க்கை இருக்கத்தானே வேண்டும்! மோஸஸைப் பற்றிப் பன்றிகள் என்ன நினைத்தன என்பதைக் கண்டுபிடிப்பது தான் சிரமமாக இருந்தது. கற்கண்டு மலையைப் பற்றி மோஸஸ் சொன்னதெல்லாம் பொய்க் கதைகள் என்று அவை அலட்சிய மாக அபிப்பிராயம் தெரிவித்தன. ஆனால், அதற்காக மோஸஸை அங்கிருந்து அவை அடித்துத் துரத்திவிடவுமில்லை. அதற்குத் தினமும் பீரும் உணவும் கொடுக்கப்பட்டது.

கால் குளம்பு சரியான பிறகு பாக்ஸர் முன்னெல்லாம் விட அதிகமாக உழைத்தது. உண்மையில் எல்லா மிருகங்களுமே எப்போதையும்விட அதிகமாக, அடிமைகள்போல உழைத்தன. பண்ணையில் சாதாரணமாக நடக்கவேண்டிய வேலைகள் பல இருந்தன. அது தவிர காற்றாடி இயந்திரக் கட்டிட வேலையும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இளம் பன்றிகளுக்கான பள்ளிக் கட்டிடமும் வேலையாகிக் கொண்டிருந்தது. மார்ச் மாதத்தில் அந்த வேலை தொடங்கியது. சில சமயம் உணவு போதாக் குறையால், அதிக வேலைசெய்யும்போது மயக்கம் வருகிற மாதிரி இருந்தது பாக்ஸருக்கு. ஆனால், அதற்காகவெல்லாம் அது வேலைசெய்யத் தயங்குவதாக இல்லை. இப்போது தன் பலம் குன்றிவிட்டது என்று அது பேச்சாலோ செயலாலோ காட்டிக் கொள்ளவேயில்லை. தன் தோற்றம்தான் ஓரளவு மாறி விட்டது. முன்போல மிடுக்குடனும் வலுவுடனும் அது இல்லை. அதன் பின் தசைகள் வடிந்து மெலிந்துவிட்டன. உடலில் சருமத்தின் பளபளப்பும் மங்கிவிட்டது. மற்ற மிருகங்கள், “பாக்ஸர் வருகிற வசந்தத்தில் முன்போலாகிவிடும்” என்று சொல்லிக்கொண்டன. ஆனால், வசந்தகாலம் வந்தும் அதன் உடல்நிலை சரியாக வில்லை; மீண்டும் இளைத்தது. சில சமயம் கற்களைக் குன்றின் மேல் ஏற்றிச் செல்கிற முயற்சியில், அதற்கு இன்னமும் தைரியமும் தெம்பும் தந்தது அதன்

மனவலிமையே தவிர உடல் வலிமையல்ல என்பது மற்ற விலங்குகளுக்கும் தெளிவாகவே தெரிந்தது.

இந்த மாதிரி சமயங்களில், பேசக்கூடச் சக்தியற்றுப் போய் பாக்ஸர் உதடுகளால், “இன்னும் அதிகமாக வேலை செய்வேன்” என்று முணுமுணுப்பதை மற்ற மிருகங்கள் கவனிக்கும். க்ளோவாரும் பெஞ்சமினும் உடம்பைப் பார்த்துக்கொள்ளச் சொல்லி மறுபடியும் எச்சரித்தன. அதையெல்லாம் பாக்ஸர் காதில் வாங்கவேயில்லை. அதனுடைய பன்னிரண்டாவது பிறந்த தினம் வந்துகொண்டிருந்தது. உபசாரச் சம்பளம் பெற்று ஓய்வு எடுக்கப்போகுமுன், காற்றாடி இயந்திரக் கட்டிடம் கட்டப் போதிய கற்கள் சேர்ந்துவிட்டால் போதும் என்று பாடுபட்டது பாக்ஸர்.

கோடையில் ஒருநாள் அஸ்தமன சமயத்தில், பண்ணை பூராவிலும் பாக்ஸருக்கு ஏதோ நேர்ந்துவிட்டது என்ற வதந்தி கிளம்பியது. தனியாக ஒரு வண்டிக் கல்லை இழுத்துவரப் போயிருந்தது அது. அந்த வதந்தி உண்மைதான். இரண்டொரு நிமிடங்களுக்குள்ளாகவே புறாக்கள் இரண்டு விஷயத்தைப் பண்ணை முழுவதும் பரப்பிவிட்டன. “பாக்ஸர் கீழே விழுந்து விட்டது; அதனால் எழுந்திருக்க முடியவில்லை!”

விலங்குகளில் பாதிக்கும் அதிகமாகக் காற்றாடி இயந்திரக் கட்டிடம் இருந்த இடத்துக்கு ஓடின. அங்கே கிடந்தது பாக்ஸர். வண்டியின் ஏர்க்கால்களுக்கிடையில் கிடந்தது. அதன் கழுத்து தரையோடு நீண்டிருந்தது. தலையைத் தூக்கக்கூட முடியவில்லை அதனால். தன் கண்கள் ஒளிமங்கி இருந்தன. அதன்மேல் வியர்வை ஆறாக ஓடிக்கொண்டிருந்தது. அதன் வாயிலிருந்து கொஞ்சமாக ரத்தம் வழிந்திருந்தது. அதன் பக்கத்தில் படுத்து க்ளோவர் கேட்டது, “பாக்ஸர்! என்ன செய்கிறது?”

பலஹீனமான குரலில் பாக்ஸர் சொல்லியது: “என் சுவாச கோசம் சரியாக இல்லை. அதனாலென்ன, பாதகமில்லை. நானில்லாமலே நீங்கள் காற்றாடி இயந்திரக் கட்டிடத்தைக் கட்டி விடுவீர்கள். ஏராளமான கற்கள் சேர்ந்துவிட்டன. தவிரவும் நான் ஓய்வுபெற இன்னும் ஒரு மாதம்தானே இருக்கிறது? உண்மையில், நான் என் ஓய்வு நாளை எதிர்பார்த்துத்தான் காத்திருந்தேன். பெஞ்சமினும் கிழவனாகிக் கொண்டிருப்பதால், அதையும் என்னுடன் ஓய்வு எடுத்துக்கொள்ள அனுமதித்தார்களானால், எனக்குப் பொழுது போகும்.”

“உதவிக்கு யாராவது வந்தால் நல்லது; யாராவது ஓடிப் போய்

நடந்துவிட்டதை ஸ்க்வீலரிடம் சொல்லுங்கள்" என்றது க்ளோவர்.

எல்லா விலங்குகளுமே பண்ணை வீட்டை நோக்கி ஓடி ஸ்க்வீலருக்குத் தகவல் கொடுத்தன. க்ளோவர் மட்டும் பாக்ஸர் பக்கத்தில் படுத்திருந்தது. பெஞ்சமின் மௌனமாக, பாக்ஸர் மேல் வந்து உட்கார்ந்த ஈக்களை விரட்டிக்கொண்டு நின்றது. கால்மணி நேரம் கழித்து ஸ்க்வீலர் வந்து சேர்ந்தது; அனு தாபமும் ஆதரவும் ததும்ப வந்தது. மிகவும் பக்தியுடன் உழைத்து வந்த பாக்ஸருக்கு நேர்ந்த விபத்து பற்றி தலைவர் தோழர் நெப்போலியன் கேள்விப்பட்டுத் துயருற்றிருப்பதாகத் தெரி வித்தது ஸ்க்வீலர். பாக்ஸருக்கு வைத்தியம் செய்வதற்காக அதை உடனேயே வில்லிங்டன் கிராமத்திலிருந்த மிருக வைத்திய சாலைக்கு அனுப்ப ஏற்பாடுகள் செய்யும்படி நெப்போலியன் விம்பருக்குச் சொல்லியனுப்பியிருப்பதாகக் கூறியது ஸ்க்வீலர். இதைக் கேட்ட மற்ற மிருகங்கள் சிறிது ஐயங்கொண்டன. இது சரியல்ல என்று அவற்றிற்குத் தோன்றிற்று. மாலியையும் ஸ்நோபாலையும் தவிர வேறு எந்த மிருகமுமே விலங்குப் பண்ணையை விட்டு வெளியே சென்றது கிடையாது. உடம்பு சரியாக இல்லாத பாக்ஸர், வைத்தியத்திற்கேயானாலும் தங்கள் எதிரிகளான மனிதர்கள் கையில் சிக்கிக்கொள்வது சரியல்ல என்று மிருகங்கள் நினைத்தன. ஆனால், ஸ்க்வீலர் அவை நினைத்தது தவறு என்பதை அதிசீக்கிரமே நிரூபித்துவிட்டது. பண்ணையில் கிடைப்பதைவிட நல்ல வைத்திய உதவி பாக்ஸருக்கு மிருக வைத்தியசாலையில் கிடைக்கும் என்றும், அங்கு உடல் சீக்கிரமே குணமாகிவிடும் என்றும் சொல்லியது ஸ்க்வீலர். அரைமணிநேரத்துக்குப் பிறகு பாக்ஸர் கொஞ்சம் தேறி, எழுந்து மெதுவாக தன் லாயத்துக்குச் சென்றது. அங்கு க்ளோவரும் பெஞ்சமினும் வைக்கோலைப் பரப்பி அது படுத்துக் கொள்ள வசதி செய்தன.

அடுத்த இரண்டு நாட்களும் பாக்ஸர் தன் லாயத்திலேயே தங்கிவிட்டது. பண்ணை வீட்டு குளிக்கும் அலமாரியில் இருந்த சிவப்பு நிற மருந்தொன்றைப் பன்றிகள் பாக்ஸருக்கு அனுப்பி வைத்தன.

சாப்பாட்டுக்குப் பிறகு, தினமும் இரண்டு வேளைகள் அந்த மருந்தைக் கொடுத்தது க்ளோவர். மாலை நேரங்களில் க்ளோவர் வந்து அதனுடன் பேசிக்கொண்டிருக்கும். பெஞ்சமின் எதுவும் பேசாமல் ஈக்களை விரட்டிக்கொண்டிருக்கும். நடந்தது பற்றித் தான் வருத்தப்படவில்லை என்று சொல்லிக் கொண்டது பாக்ஸர். உடல் தேறிவிட்டால், அது இன்னும் மூன்று வருடங்கள் உயிருடன் இருக்கலாம். பெரிய வயலின் ஒரு மூலையில் தன் ஓய்வு நாட்களை நிம்மதியாகக் கழிக்க அது எதிர்பார்த்துக் காத்திருந்தது. படித்து அறிவை விருத்தி செய்துகொள்ள இது வரை அதற்கு அவகாசமே இருந்ததில்லை. தன் வாழ்நாளில் இனி எஞ்சிய பகுதியை, எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளத் தான் பாடுபடப் போவதாகக் தெரிவித்தது பாக்ஸர்.

எனினும், பெஞ்சமினோ க்ளோவரோ தங்கள் வேலைகள் எல்லாம் முடிந்தபிறகுதான் பாக்ஸருடன் இருக்க முடிந்தது. அதை எடுத்துப்போக நண்பகலில் வண்டி வந்தது. பன்றி ஒன்றின் மேற்பார்வையில் கிழங்குகளைப் பிடுங்கி நடுகிற வேலையில் ஈடுபட்டிருந்தன மிருகங்கள் எல்லாம் அப்போது. பெஞ்சமின் உரக்கக் கத்திக் கொண்டே வயலிலிருந்து ஓடோடியும் வந்தது. பெஞ்சமின் வழக்கத்துக்கு விரோதமாக இப்படிப் பதட்டத்துடன் ஓடுவதை இப்போதுதான் முதல் தடவையாகப் பார்த்த விலங்குகள் அதிசயித்தன. “அவசரம்! அவசரம்! சீக்கிரம் வாருங்கள், வாருங்கள், பாக்ஸரை எடுத்துச் செல்லுகிறார்கள்!” என்று பெஞ்சமின் கத்தியது. பன்றியிடம் அனுமதிகூட கேட்காமல் எல்லா மிருகங்களும் வேலைகளை அப்படியே விட்டுவிட்டு, பண்ணைக் கட்டிடத்தை நோக்கி ஓடின. உண்மைதான், அங்கே மூடிய ஒரு பெரிய வண்டி லாயத்துக்கு எதிரில் நின்று கொண்டிருந்தது. வண்டியில் இரண்டு குதிரைகள் பூட்டப் பட்டிருந்தன. வண்டியின்மேல் பெரிய எழுத்துகளில் ஏதோ எழுதப்பட்டிருந்தது. வண்டியோட்டி பார்ப்பதற்கே அவநம்பிக்கை விளைவிக்கும் அருவருப்பான தோற்றமுடையவனாகவும் தந்திரக்காரனாகவும் காணப்பட்டான். லாயத்தில் பாக்ஸரைக் காணவில்லை.

விலங்குகள் எல்லாம் அந்த வண்டியைச் சுற்றிச் சுற்றி வந்து, “போய் வா, பாக்ஸர், போய் வா” என்று விடை கொடுத் தனுப்பின.

“முட்டாள்கள்! முட்டாள்கள்!” என்று பெஞ்சமின் குதித்துக் குதித்து வந்தது. தன் கால்களால் பூமியை அறைந்தது. அது சொல்லியது: “முட்டாள்களே! வண்டிமேல் எழுதியிருப்பது உங்களுக்குத் தெரியவில்லையா?”

மிருகங்கள் சற்றுத் தயங்கின. அங்கு ஒரு விநாடி மௌனம் நிலவியது.

பிறகு முரியல் எழுத்து கூட்டி வண்டி மேல் எழுதி யிருப்பதை படித்தது. அதை அப்பால் தள்ளிவிட்டு பெஞ்சமின் எல்லா மிருகங்களுடைய காதிலும் விழும்படியாக வாசித்தது.

“ஆல்பிரட் ஸிம்மண்ட்ஸ், குதிரை கொல்லி; தோல், எலும்பு வியாபாரி, நாய்க்குட்டிகளுக்கு மாமிசம் கிடைக்கும்” என்று படித்தது பெஞ்சமின். “புரியவில்லையா உங்களுக்கு, பாக்ஸரை குதிரை கொல்லி எடுத்துச் செல்கிறான், புரிந்ததா?” என்றது அது;

விலங்குகள் எல்லாம் இந்தக் கொடுமையை எண்ணிப் பயங்கரமாகக் கூச்சலிட்டன. அதே சமயம் வண்டிக்காரன் சாட்டையைச் சொடுக்கித் தன் வண்டியை ஓட்டத் தொடங் கினான். முற்றத்தை விட்டு வண்டி வேகமாக வெளியேறியது. எல்லா மிருகங்களும் உரக்கக் கத்திக்கொண்டு வண்டியைப் பின் தொடர்ந்தன. க்ளோவர் விழுந்தடித்துக்கொண்டு முன் வரிசைக்கு வந்தது. அப்போது வண்டி வேகமாகப் போகத் தொடங்கியது. பருத்துவிட்ட க்ளோவர் வேகமாக ஓட முயன்றது. “பாக்ஸர், பாக்ஸர்” என்று கத்திக்கொண்டே ஓடியது. மூடிய வண்டியில் உயர இருந்த ஜன்னல் வழியாக பாக்ஸரின் முகமும் அதன் நெற்றியிலுள்ள வெள்ளைக் கோடும் தெரிந்தன.

பலமான குரலில் க்ளோவர் கத்தியது: “பாக்ஸர்! பாக்ஸர்! வந்துவிடு வெளியே, வந்துவிடு வெளியே; உன்னைக் கொல்ல அழைத்துப் போகிறார்கள்.”

“வெளியே குதித்துவிடு பாக்ஸர்” என்று எல்லா மிருகங் களுமாகச் சேர்ந்து இப்போது குரல் கொடுத்தன. ஆனால், வண்டி வேகமாகச் சென்றது. க்ளோவர் சொன்னதை பாக்ஸர் புரிந்துகொண்டதா என்பது சந்தேகம்தான். ஆனால், ஒரு நிமிஷத் துக்குப்பின் அதன் முகம் ஜன்னலிலிருந்து மறைந்தது. வண்டியின் உட்பகுதியை பாக்ஸர் காலால் உதைத்துக் கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. சத்தம்தான் பெரிதாகக் கேட்டதே தவிர, பலம் அதிகமில்லாத உதைகள்தான் அவை. முன்மாதிரி பாக்ஸர் முழுத் தெம்புடனிருந்தால், சில உதைகளிலேயே அந்த வண்டியை நொறுக்கியிருக்கும்; நெருப்புப் பெட்டியை நசுக்குவது போல அது வண்டியை நசுக்கியிருக்கும். ஆனால், பாவம்! அதன் கால்களிலே இப்போது பலமேயில்லை. சில நிமிஷங்களில் வண்டி நகர நகர பாக்ஸரின் உதைகளின் சப்தம்கூடக் குறைந்து விட்டது. மிருகங்கள் என்ன செய்வது என்றறியாமல் திகைத்தன.

ஒன்றும் தோன்றாமல் போகவே, விலங்குகள் வண்டியை இழுத்துச்செல்லும் குதிரைகளைக் கெஞ்சின. “தோழர்களே! தோழர்களே! உங்கள் சகோதரன் அது. எமலோகத்துக்கு அதை

அழைத்துக்கொண்டு போகாதீர்கள்" என்று கத்தின. ஆனால், வண்டியை இழுத்துச் செல்லும் குதிரைகள் முட்டாள்கள்; கல்வி யறிவற்ற மிருகங்கள். நடந்தது என்ன என்பதை அறியாத படி வேகமாகப் போய்க்கொண்டிருந்தன. காதுகளை உயர்த்திக் கொண்டு இன்னும் வேகமாக ஓடின. அதற்கப்புறம் பாக்ஸரின் முகம் ஜன்னலில் தெரியவில்லை. வெளிக் கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டால் வண்டி தொடர்ந்து போக முடியாதே என்று ஒரு மிருகத்துக்கு யோசனை தோன்றியது. நல்ல யோசனைதான். ஆனால், காலதாமதமாகி விட்டது. மிருகங்கள் போய்க் கதவை சாத்துவதற்குமுன் வண்டி கதவைத் தாண்டிப் போய்விட்டது. பாக்ஸரை மீண்டும் யாரும் பார்க்கவில்லை.

வில்லிங்டன் ஆஸ்பத்திரியில் பாக்ஸர் இறந்துவிட்டதாக மூன்று நாட்களுக்குப் பிறகு அறிவிக்கப்பட்டது. குதிரைக்கு எவ்வளவு சிறப்பாக வைத்தியம் செய்ய முடியுமோ அவ்வளவு செய்தும் பாக்ஸர் பிழைக்கவில்லை என்றும் அறிவிக்கப்பட்டது. ஸ்க்வீலர் பன்றி வந்து இந்த விஷயத்தை எல்லா விலங்கு களுக்கும் தெரிவித்தது. பாக்ஸரின் கடைசி நேரத்தில் தான் அதனுடன் இருந்ததாக அது சொல்லியது.

"அந்தக் காட்சியை என்னவென்று நான் சொல்வேன்? அது என் மனத்தை உருக்கிவிட்டது" என்றது ஸ்க்வீலர். பிறகு ஒரு முன்னங்காலைத் தூக்கிக் கண்ணில் துளிர்த்த நீரைத் துடைத்துக் கொண்டது. "கடைசியில் அது உயிர்விடும்போது நான் பக்கத்தில் இருந்தேன். கடைசி மூச்சுடன், பேசமுடியாமல் திணறிக்கொண்டே அது, "காற்றாடிக் கட்டிடம் முடியும்முன் போகிறேனே!" என்று சொல்லிக் கண்ணீர் வடித்தது. 'தோழர்களே முன்னேறுங்கள்! விலங்குப் பண்ணை நீடூழி வாழ்க! தோழர் நெப்போலியன் செய்வதே சரி' என்று கூறிவிட்டு உயிர் துறந்தது அது. இதுதான் பாக்ஸரின் கடைசி வார்த்தைகள்."

இதைச் சொல்லிவிட்டு நடுவே கொஞ்சம் தயங்கியது ஸ்க்வீலர் பன்றி. அதனுடைய சிறிய கண்கள் அங்குமிங்கும் பாய்ந்து சந்தேகத்துடன் பார்த்தன. கொஞ்சநேரம் மௌனமாக இருந்து விட்டுத் தொடர்ந்தது அது. பாக்ஸரை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லும்போது ஒரு அசட்டுத்தனமான வதந்தி, விஷமத்தனமான வதந்தி உலாவியதாக ஸ்க்வீலரின் காதில் விழுந்ததாம். "சில மிருகங்கள் வண்டியின்மேல் 'குதிரை கொல்லி' என்று எழுதியிருந்ததைத் தவறுதலாக நினைத்துக் கொண்டு விட்டன. பாக்ஸரைக் குதிரை கொல்லியிடம்தான் கொண்டு போகிறார்கள் என்று அவை எண்ணிவிட்டன; இவ்வளவு முட்டாளாக எந்த மிருகமாவது எப்படி இருக்க முடியும் என்பது தனக்குப் புரியவேயில்லை" என்றது ஸ்க்வீலர்.

அங்குமிங்கும் குதித்தபடி வாலை ஆட்டிக்கொண்டு, “நமது தலைவரையும் அவர் மனப்போக்கையும் இன்னமுமா மிருகங்கள் தெரிந்துகொள்ளாதிருக்கின்றன? நமது தலைவர் தோழர் நெப்போலியன், அப்படியும் நடக்க விட்டுவிடுவாரா என்ன? ஆனால், அந்தத் தப்பபிப்பிராயத்தைச் சுலபமாகவே போக்கிவிட முடியும். அந்த வண்டி முதலில் ஒரு குதிரை கொல்லியின் வண்டியாக இருந்தது உண்மைதான். அதை வாங்கிய மிருக வைத்தியருக்கு பழைய பெயரை அழித்துவிட்டுப் புதுப்பெயரை எழுத சௌகரியப்படவில்லை. ஆகவேதான் மிருக வைத்தியரின் வண்டியை அறிவில்லாத மிருகங்கள் குதிரை கொல்லியின் வண்டி என்று எண்ணிக் கூக்குரலிட ஆரம்பித்துவிட்டன” என்றது ஸ்க்வீலர்.

இதைக் கேட்டதும் மிகவும் அனுதாபமடைந்தன மிருகங் களெல்லாம். ஸ்க்வீலர் தொடர்ந்து பாக்ஸரின் கடைசி நிமிஷங் களைப் பற்றி உருக்கமாக விவரிக்கத் தொடங்கிவிடவே, விலங்குகளுக்கு கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகங்களும் மறைந்துவிட்டன. எவ்வளவு கவனத்துடன் டாக்டர்கள் நமது பாக்ஸரைக் கவனித்துக்கொண்டார்கள் என்பதையும் விலை உயர்ந்த மருந்துகளை நெப்போலியன் உத்தரவின் பேரில் செலுத்தினார்கள் என்பதையும் பற்றி உருக்கமாகப் பேசியது ஸ்க்வீலர். எனவே கடைசி சந்தேகங்களும் தீர்ந்து விலங்குகள் துக்கத்திலும் ஒரு திருப்தியடைந்தன. பாக்ஸர் கடைசி நிமிஷங் களை மிகவும் சௌகரியமாகக் கழித்தது என்கிற நம்பிக்கையில் சிறிது பெருமையும் மனநிறைவும் அடைந்தன.

அடுத்த ஞாயிறன்று காலையில் கொட்டகையில் கூட்டம் கூடியபோது, நெப்போலியனே மேடைமீது தோன்றி, பாக்ஸரின் ஞாபகார்த்தமாக ஒரு சிறிய சொற்பொழிவு நிகழ்த்தியது. பண்ணையிலே புதைக்க அதன் உடலைக் கொண்டுவர முடிய வில்லையே என்று வருத்தம் தெரிவித்தது நெப்போலியன். ஆனால், நமது துக்கத்தைக் குறிக்கும் லாரல் இலைகளால் ஒரு அழகான மாலைகட்டச் சொல்லி, அதை பாக்ஸரின் கல்லறை யிலே அணிவிக்கச் செய்திருப்பதாகச் சொல்லியது. சில நாட் களுக்குப் பிறகு பாக்ஸரின் ஞாபகார்த்தமாக ஒரு விருந்து நடத்துவது என்று பன்றிகள் தீர்மானித்திருப்பதாகச் சொல்லிற்று நெப்போலியன். பாக்ஸரின் இரண்டு ஸ்லோகங்களையும் - “நான் இன்னும் கடுமையாக வேலை செய்வேன்” என்பதையும், “நெப்போலியன் சொல்லிவிட்டால் சரி” என்பதையும் விலங்கு களுக்கெல்லாம் கடைசியில் ஞாபகமூட்டியது நெப்போலியன். பாக்ஸரின் ஞாபகார்த்தமாக அது காட்டிய வழியை, அதன் கொள்கைகளை மிருகங்கள் பின்பற்றி நடந்து அதைக் கௌர விக்க வேண்டும் என்றது நெப்போலியன். மிருகங்களுக்கு இந்த

இரண்டையும் விடச் சிறந்த ஸ்லோகங்கள் கிடைக்காது என்பது நிச்சயம் என்றது அது.

# 10

வருடங்கள் சென்றன ; பருவங்கள் வந்து வந்து போயின . விலங்குகளின் எளிய வாழ்க்கை ஓடிக் கழிந்த வண்ணமாயிருந்தது . நாளடைவில் க்ளோவர் , பெஞ்சமின் , மோசஸ் என்கிற காகம் , ஒரு சில பன்றிகள் - இவற்றைத் தவிர வேறு எந்த மிருகத்துக்குமே புரட்சிக்கு முந்திய நிலைமை எப்படியிருந்தது என்பதே மறந்துவிட்டது .

முரியல் இறந்துவிட்டது. பிஞ்ச்பெல், ஜெஸ்ஸி, பிஞ்சர் ஆகியவையும் இறந்துவிட்டன. ஜோன்ஸ்கூட இறந்துவிட்டான். எங்கேயோ வெகு தூரத்துக்கப்பால் ஒரு குடிகார விடுதி யிலே இறந்துவிட்டான் அவன். ஸ்நோபாலைப் பற்றி யாருக்குமே ஞாபகம் இல்லை. பாக்ஸரைப் பற்றிக்கூட எவ்வித ஞாபகமும் யாருக்கும் இல்லை. அதனுடன் நெருங்கிப் பழகிய ஒன்றிரண்டு மிருகங்களைத் தவிர. க்ளோவர் இப்போது நன்கு பெருத்துவிட்ட கிழட்டுக் குதிரை. அதனால் அதன் அங்கங் களைச் சரிவர அசைக்கக்கூட முடிவதில்லை.

கண்களிலே எப்போதும் நீர் ஒழுகிக்கொண்டேயிருந்தது. ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டிய வயதைத் தாண்டி இரண்டு வருடங்களாகிவிட்டது. ஆனால், எந்த மிருகமும் ஓய்வு எடுத்துக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை. வயதான விலங்குகளுக்காகப் பண்ணையில் ஒரு பகுதியை ஒதுக்கிவைப்பது என்ற பேச்சே இப்போதெல்லாம் யார் காதிலும் விழுவதில்லை. நெப்போலியன் இப்போது சரியான பருவமடைந்துவிட்டது; முந்நூற்றிருபது பவுண்டு கனம் இருந்தது. ஸ்க்வீலர் மிகவும் பருத்துவிட்டதனால் அதன் கண்களைக் கூட சதை மூடியிருந்தது சிரமப்பட்டுத் தான் அது கண்களை திறந்து எதையும் பார்க்க முடியும். கிழட்டு பெஞ்சமின் மட்டும் எப்போதும் போல இருந்தது. முகத்தில் கொஞ்சம் அதிகமான வெள்ளை விழுந்திருந்த மாதிரியிருந்தது. மற்றபடி அது மாறவேயில்லை. பாக்ஸரின் சாவுக்குப்பின் முன்னையும்விட குறைவாகப் பேசியது அது. வாய் திறவாமலும் ஆத்திரத்துடன் இருப்பது போலவும் இருந்தது அது.

பண்ணையிலே ஏராளமான விலங்குகள் இருந்தன இப்போது. எனினும் விலங்கு உற்பத்தி விகிதம் ஆரம்ப நாட்களில் எதிர்பார்த்தமாதிரி இல்லை என்றுதான் சொல்லவேண்டும். புதிதாகப் பிறந்த பல மிருகங்களுக்கு புரட்சி என்பதே மங்கிய

தோர் பண்டைக் காலத்துச் செய்தியும் மரபும் தான் என்று சொல்லவேண்டும்; மிருகங்கள் சொல்லிச் சொல்லிக் கேட்ட செய்தி அது. வெளியிடங்களிலிருந்து வாங்கிக் கொண்டுவரப் பட்ட சில மிருகங்களுக்கு புரட்சிச் செய்தியே மிகவும் புதுமை யான ஒரு விஷயமாக இருந்தது. க்ளோவரைத் தவிர இன்னும் மூன்று குதிரைகள் பண்ணையில் இப்போது இருந்தன. நேர்த்தி யாக நிமிர்ந்து நிற்கும் மிருகங்கள் அவை; வேலை செய்வதில் சளைப்பதில்லை; ஆனால், பரம முட்டாள்கள். இரண்டாவது எழுத்துக்கு மேல் அவற்றால் படிக்கக் கற்றுக் கொள்ளக்கூட இயலவில்லை. புரட்சியைப் பற்றியும் விலங்கு தத்துவம் பற்றியும் யார் சொன்னதையும் அவை நம்பத் தயாராக இருந்தன. க்ளோவர் எது சொன்னாலும் அவை அதை அங்கீகரித்தன. தகப்பனாரை நேசித்து, அவருக்கு மரியாதையாக நடந்து கொள்வதைப் போல அவை க்ளோவரை நேசித்து மரியாதையாக நடந்துகொண்டன. ஆனால், க்ளோவர் புரட்சியைப் பற்றிச் சொன்னதில் பெரும் பகுதி அவற்றுக்குப் புரியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

பண்ணையிலே ஏராளமாக விளைந்தது; இப்போது அது பணக்காரப் பண்ணைதான். நேர்மையாகவும் நிர்வகிக்கப்பட்டு வந்தது. சரியான முறையைக் கையாண்டு நடந்த பண்ணை அது. பில்கிங்டனிடமிருந்து இரண்டு வயல்களை விலைக்கு வாங்கி, பண்ணை இப்போது விஸ்தரிக்கப்பட்டிருந்தது. கடைசியில் காற்றாடி இயந்திரமும் ஒரு வழியாகக் கட்டி வெற்றிகரமாக முடிந்தது. தானியம் அடிக்கும் இயந்திரமும், வைக்கோல் தூக்கிப் போகும் இயந்திரமும் பண்ணைக்கே சொந்தமாக வாங்கப்பட்டு விட்டன. பண்ணையிலே புதுக் கட்டிடங்கள் பல தோன்றிவிட்டன. விம்பர் ஒரு ரேக்ளா வண்டி வாங்கிவிட்டான். ஆனால், காற்றாடி இயந்திரம் மின்சார உற்பத்திக்கு உபயோகப் படவில்லை. தானியங்கள் அரைக்கும் இயந்திரத்தை ஓட்டத்தான் உபயோகப்பட்டது காற்றாடி. ஆனால், மாவு அரைப்பதால் சற்று அதிகமாகவே பண்ணைக்குப் பணம் வந்தது. விலங்குகள் எல்லாம் சிரமப்பட்டு இப்போது இன்னொரு காற்றாடி இயந்திரக் கட்டிடம் கட்டுவதில் முனைந்திருந்தன. அது கட்டி முடிந்த வுடன் பண்ணையிலே மின்சார சக்தி உற்பத்தியாகிவிடும் என்று சொல்லிக்கொள்ளப் பட்டது. லாயங்களில் மின்சார விளக்குகள், சுடு தண்ணீர், வாரத்தில் மூன்றுநாள் வேலை என்றெல்லாம் கனவுகாண மிருகங்களுக்குச் சொல்லித்தந்த ஸ்நோபாலுடன் அந்தப் பேச்சுகளும் ஒரு வழியாக மறைந்துவிட்டன. அவை யெல்லாம் விலங்கு தத்துவத்துக்கு எதிரான கருத்துகள் என்று

நெப்போலியன் ஐயந்திரிபறக் கூறிவிட்டது. மிருகங்களைப் பற்றிய மட்டில் உண்மையான இன்பம் என்பது, கடினமாக வேலை செய்து செட்டாக வாழ்வதில்தான் இருக்கிறது என்று நெப்போலியன் சொல்லிவிட்டது.

எப்படியோ பண்ணை பணக்காரப் பண்ணையாகிவிட்டது. ஆனால், விலங்குகள் எந்தவிதத்திலும் பணக்காரர் களாகிவிட வில்லை. அதாவது பன்றிகளையும் வேட்டை நாய்களையும் தவிர வேறு எந்த மிருகத்துக்கும் பணம் சேர்ந்துவிடவில்லை. இதற்குக் காரணம், பன்றிகளும் நாய்களும் பண்ணையிலே அதிகமாக இருந்ததனால்தான் என்று வேண்டுமானால் சொல்லலாம். அந்தப் பன்றிகளும் நாய்களும்கூட அதனதன் சக்திக்கேற்றபடி உழைக்காமல் இல்லை. பண்ணையை மேற்பார்வை பார்ப்பதும், நிர்வகிப்பதும் மிகவும் சிரமமான காரியங்கள் அல்லவா என்று ஸ்க்வீலர் அடிக்கடி கேட்கும். மற்ற மிருகங்கள் புரிந்துகொள்ள முடியாத உழைப்பு அது என்பதுதான் அதில் விசேஷம். உதாரண மாக ஸ்க்வீலர் பன்றி ஒருநாள் சொல்லியது: "மிகவும் ரகசிய மான பல பைல்கள், அறிக்கைகள், குறிப்புகள், முதலியவற்றைச் சேகரிக்கச் சில மிருகங்கள், ஓயாமல் ஒழியாமல் உழைக்க வேண்டியதாக இருக்கிறது." இந்த வார்த்தைகளே புரியாத சாமான்ய மிருகங்களுக்கு விஷயம் எப்படிப் புரியும்? "ஒவ்வொரு நாளும் மிகவும் சிரமப்பட்டுச் சம்பாதித்த அனைத்தையும் காகிதங்களில் விடாமல் எழுதி, காகிதம் நிரம்பியதும் யார் கையிலும் அதெல்லாம் அகப்பட்டு விடாமல் அடுப்பில் போட்டு எரித்தாக வேண்டும். பண்ணையின் நலனே இதை நம்பித்தான் இருக்கிறது" என்று சொல்லியது ஸ்க்வீலர். எனினும், இந்தப் பன்றிகளோ நாய்களோ உணவு எதையும் உற்பத்தி செய்வ தில்லை என்பது உண்மைதான். அவற்றின் பசி மட்டும் அதிகமாக இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும்.

மற்ற மிருகங்களைப் பற்றிய வரையில் ஏதாவது சொல்ல வேண்டுமானால், அவற்றின் வாழ்க்கை எப்போதும் போலவே தான் இருந்தது. எப்போதும் அரைப்பட்டினிதான்; எப்போதும் அதே வைக்கோல் படுக்கைதான்; எப்போதும் குடிக்கும் தண்ணீர் அந்தக் குட்டையில் இருப்பதுதான்; எப்போதுமே வயலில் ஓயாத உழைப்புத்தான். மாரிக்காலத்தில் குளிரில் நடுங்க வேண்டும்; கோடை காலத்தில் ஈக்கள் உபத்திரவம் செய்யும்.

இப்போது இருந்ததைவிட ஜோன்ஸ் அடித்து விரட்டப்பட்ட பின்

அதாவது புரட்சியின் முதல் சில வருடங்களிலாவது நிலைமை சிறப்பாக, உயர்வாக இருந்ததா என்று சில மிருகங்கள் ஞாபகப்படுத்திப் பார்க்க முயன்று தங்கள் மண்டைகளை உடைத்துக்கொண்டன. தீர்மானமாக அவற்றிற்கு எதுவும் சொல்லும்படியாக ஞாபகம் இல்லை. அவற்றின் இன்றைய வாழ்வை எதனுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது என்று அவற்றிற்குத் தெரியவில்லை; ஒப்பிடக்கூடியதாக ஒன்றும் இருந்ததில்லை என்றுதான் தோன்றியது. ஸ்க்வீலரின் புள்ளிவிவரங்களைத் தவிர வேறு எதுவும் ஆதாரமாக அவற்றிற்குக் கிடைக்கவில்லை. ஆனால், ஸ்க்வீலரின் புள்ளிக் கணக்குகள், நாளுக்கு நாள் நிலைமை சீரடைந்து மேன்மை அடைந்திருப்பதாகத்தான் நிரூபித்தன. இதெல்லாம் முடிவில்லாத பிரச்சனையாகவும், விடையற்ற புதிராகவும்தான் விலங்குகளுக்குத் தோன்றின. எது எப்படியானாலும், பிரச்சனையைப் பற்றிச் சிந்திக்கவோ, யோசனை செய்து புதிருக்கு விடை காணவோ மிருகங்களுக்கு இப்போது நேரமேயில்லை.

கிழட்டு பெஞ்சமின் மட்டும்தான் எல்லாவற்றையும் நினைவிலிருத்திக் கொண்டதாகச் சொல்லிக்கொண்டது. 'தனது நீண்ட வாழ்க்கையின் அனுபவத்தில் எதுவும் எப்படியும் சீரடைந்துவிடுவதுமில்லை; எப்படியும் மோசமாகிவிடுவது மில்லை; அநேகமாக, சற்றேறக்குறைய ஒரேமாதிரியாகத்தான் எல்லா விஷயங்களும் எப்போதுமே இருந்து வருகின்றன என்று அபிப்பிராயப்பட்டது பெஞ்சமின். பசி, கஷ்டம், ஏமாற்றம் எல்லாம் அதி உச்சமும் அடைவதில்லை; அதிகமாகக் குறைந்து விடுவதுமில்லை. இதுதான் மாறாத இயற்கை நியதி என்றது பெஞ்சமின்.'

இருந்தும் விலங்குகள் நம்பிக்கை இழக்கவில்லை. அது மட்டுமல்ல, சுதந்திர மிருகங்களாக, விலங்குப் பண்ணையின் பிரஜைகளாக இருப்பதிலே அவை கௌரவமும், பெருமையும் பாராட்டிக் கொண்டன. அந்த உணர்ச்சியை அவை என்றும் இழந்துவிடவில்லை. நாட்டிலே, இங்கிலாந்து தேசத்திலே, அந்தப் பண்ணை ஒன்றுதான் இம்மாதிரி சரித்திரப் பிரசித்தி பெற்ற பண்ணை. மிருகங்களால் நிர்வகித்து வரப்படும் பண்ணை அது ஒன்றேதான் உண்டு. இதைப் பற்றி அவை பெருமையும் மகிழ்ச்சியும் கொண்டதில் தவறு ஒன்றுமில்லையே! புரட்சிக் காலத்திய மிருகங்களும் அவற்றின் குட்டிகளும் மட்டுமல்ல; இருபது மைல்களுக்கப்பாலுள்ள வெளிப் பண்ணைகளிலிருந்து வாங்கப்பட்டு, இங்கு வந்து சேர்ந்துகொண்ட மிருகங்களும்கூட இந்த விஷயம் பற்றிப் பெருமை பாராட்டிக்கொண்டன. துப்பாக்கி வேட்டு வெடிக்கும்போது, கொடி மரத்தின் உச்சியிலே பச்சைக்கொடி

பறக்கும்போது, அழியாத பெருமையுடன் அவற்றின் மார்பகம் விம்மிற்று; அவற்றின் நடை நிமிர்ந்தது;

அந்த மாதிரியான சந்தர்ப்பங்களில் அவற்றின் பேச்சு பழைய வீரதீரச் செயல்கள் நிறைந்த நாட்களைப் பற்றித் திரும்பும். ஜோன்ஸைப் பண்ணையிலிருந்து விரட்டியது, ஏழு விலங்கு விதிகளையும் எழுதியது, மனிதர்கள் படையெடுத்து வந்ததை மிருகங்கள் சமாளித்து வெற்றிகொண்டது எல்லாம் பற்றி விரிவாகப் பேசப்படும். பழைய கனவுகளில் எதுவும் அடியோடு இன்னமும் அழிந்துவிடவில்லை. கிழட்டுத் தளபதி ஒரு காலத்தில் கனவாகக் கண்டு சொன்ன அந்த லட்சிய பூமி, மனிதன் காலடி படாத இங்கிலாந்து, விலங்குகள் கைக்கு ஒருநாள் பூரணமாக வந்துவிடும் என்றுதான் மிருகங்கள் நம்பின. அது என்றாவது ஒருநாள் வரும்; சமீபத்தில், அவற்றின் வாழ்நாளிலே வரா விட்டாலும், என்றாவது ஒரு நாள் வந்தே தீரும் அது. அங்கும் இங்கும் ரகசியமாக மிருகங்கள் இன்னும் ‘இங்கிலாந்தின் விலங்குகள்’ பாட்டைக் கற்றுக்கொண்டு மனதிற்குள் பாடிக் கொண்டன. இரைந்து பாடினால் ஆபத்து. எந்த மிருகமும் துணிந்து பாடாது. எனினும், பாட்டு மட்டும் எல்லா மிருகங் களுக்கும் நன்கு தெரியும்.

விலங்குகளின் வாழ்க்கை கஷ்டமாகத்தான் இருந்தது; அவற்றின் நம்பிக்கைகள் எல்லாமே நிறைவேறவில்லை. எனினும் அவை உலகிலுள்ள மற்ற மிருகங்கள் போல மனிதர்களுக்கு அடிமையாக இல்லை. இந்தப் பிரக்ஞை அவற்றிற்குப் பூரண மாக இருந்தது. அவை பட்டினி கிடந்தால், அதற்குக் காரணம் கொடுங்கோலர்களாகிய மனிதர்கள் அவற்றின் உணவைப் பறித்துக் கொண்டதாலல்ல என்பது நிச்சயம்! வேலை கடுமை தான்; ஆனால், அவை தங்களினத்தாருக்காகவே உழைத்தார்கள். வேறு மனிதன் யாருக்காகவும் அல்ல. அந்த விலங்குகளில் யாரும் இரண்டு காலால் நடப்பவைகள் அல்ல. ஒரு மிருகமும் வேறு யாரையும் ‘எஜமான்’ என்று அங்கு அழைப்பதில்லை. எல்லா விலங்குகளுமே சரிநிகர் சமானமானவை.

ஒரு நாள் கோடையின் ஆரம்பகாலத்தில், ஸ்க்வீலர் பன்றி ஆடுகளை எல்லாம் தன்னுடன் வரும்படி உத்தரவிட்டது. பண்ணையின் ஒரு கோடியிலிருந்த, ஒரு உபயோகப்படாத வயலில், புதர்கள் அடர்ந்திருந்த ஒரு பகுதிக்கு அவற்றை அழைத்துச் சென்றது. அன்று பூராவும் ஸ்க்வீலர் மேற்பார்வையில் ஆடுகளெல்லாம் அந்த வயலிலேயே தங்கிவிட்டன. இலை தழைகளைச் சாப்பிட்டுக் கொண்டிருந்துவிட்டன. மாலை

ஸ்க்வீலர் மட்டும் பண்ணை வீட்டுக்குத் திரும்பிவிட்டது. ஆடுகள் அங்கேயே தங்கிவிட்டன. சீதோஷ்ணமும் வெளியே தங்குவதற்கு சௌகரியமாக இருந்தது. ஒரு வாரம் முழுவதும் ஆடுகள் மட்டும் தனியாக வயலிலே தங்கின. மற்ற மிருகங்கள் கண்ணில்படாமலே அவை தங்கின. ஸ்க்வீலர் ஒவ்வொரு நாளும் பகற்பொழுதின் பெரும் பகுதியை ஆடுகளுடனேயே கழித்தது. ஆடுகளுக்கு தனியாக புதுப்பாட்டு ஒன்று கற்றுக் கொடுத்துக்கொண்டிருந்ததாகவும், அந்த வேலை முடிகிற வரையில் ஆடுகளை மற்ற விலங்குகள் அணுகக்கூடாது என்றும் சொல்லியது ஸ்க்வீலர்.

ஆடுகள் பண்ணைக்குத் திரும்பிய பின் ஒரு நாள் மனோ கரமான மாலைவேளையில், மிருகங்கள் எல்லாம் தங்கள் வேலைகளை முடித்துக்கொண்டு பண்ணை வீட்டுப் பக்கம் போய்க்கொண்டிருக்கும்போது, பயங்கரமான ஒரு கனைப்புச் சப்தம் கேட்டு அவை பயந்தன. முற்றத்திலிருந்து வந்த அந்தப் பயந்த குரலைக் கேட்டு அருகே சென்று எட்டிப் பார்த்தன. கனைத்தது க்ளோவர்தான். மறுபடியும் கணைத்தது அது. முற்றத்திலே க்ளோவரைப் பயமுறுத்திக் கனைக்கச் செய்த காட்சியை மற்ற மிருகங்களும் கண்டன.

ஒரு பன்றி நிமிர்ந்து தன் இரண்டு பின்னங்கால்களால் நடந்துகொண்டிருந்தது.

ஆம். அப்படிச் செய்துகொண்டிருந்தது ஸ்க்வீலர் பன்றியே தான். அப்படி அந்தப் பெரிய உருவத்தைச் சமாளித்துப் பழகாத காரணத்தால், ஸ்க்வீலர் தட்டுத் தடுமாறிக் கொண்டே நடந்தது. மற்ற மிருகங்களைக் கவனிக்காத மாதிரியே உல்லாசமாக நடைபோட்டது. ஒரு நிமிஷம் கழித்து, பண்ணை வீட்டுக் கதவைத் தாண்டிக்கொண்டு வரிசையாகப் பன்றிகள் வந்தன. ஒவ்வொன்றும் நிமிர்ந்து பின்னங்கால்களால் நடந்து வந்தன. சில பன்றிகள் சாமர்த்தியமாக நடந்தன. சில தடுமாறின. பழக்கம் போதாத காரணத்தால் ஒரு சில குட்டிக் கரணம் போட்டுவிடும் போல இருந்தது. ஒரு சில கையில் கழியிருந்தால் ஊன்றிக் கொள்ளலாமே என்று நினைப்பதுபோல இருந்தது. ஆனால், ஒவ்வொரு பன்றியும் இரண்டு கால்களால் நடந்தே முற்றத்தை ஒருமுறையாவது சுற்றி வந்தது. கடைசியில் வேட்டை நாய்களின் குரைப்புச் சப்தம் கேட்டது. சேவற் கோழி கூவிவர, நெப் போலியனே வெளியே வந்தது, அதுவும் நிமிர்ந்து கம்பீரமாக ராஜபார்வை பார்த்துக்கொண்டு, மெல்ல நடை போட்டுக் கொண்டு

இரண்டு கால்களால் நடந்தது. கம்பீரமாகப் பார்த்துக் கொண்டு அது நடந்தது சிறப்பாகத்தான் இருந்தது. நாய்கள் கூடவே குறைத்துக்கொண்டு வந்தன.

நெப்போலியன் கையில் ஒரு சாட்டையும் இருந்தது.

ஒரு விநாடி பூரணமான, பயங்கரமான மௌனம் நிலவியது அங்கே. ஆச்சரியம், பயம் என்கிற உணர்ச்சிகள் வசப்பட்டவை யாக விலங்குகள் ஒன்றையொன்று நெருக்கியடித்துக்கொண்டு நின்றன. பன்றிகள் இரண்டு கால்களால் நடந்து முற்றத்தில் குறுக்கும் நெடுக்கும் போவதைக் கவனித்தன. உலகமே தலை கீழாகக் கவிழ்ந்துவிட்ட மாதிரி அந்த மிருகங்களுக்குத் தோன்றியது. முதலில் உண்டான பயமும் அதிர்ச்சியும் தெளிந்தது. அடுத்த நிமிஷத்தில் அவை, நாய்களிடம் தங்களுக்கிருந்த பயத்தையும் பொருட்படுத்தாமல், வழக்க பேதத்தையும் மறந்துவிட்டு, நெப்போலியனையும் அதன் பன்றி இனத்தவரையும் பற்றித் தங்கள் மனத்திலிருந்ததை, அதாவது அதிருப்தியை எதிர்ப்பைச் சொல்லிவிடும் தருவாயில் இருந்தன மிருகங்கள். ஆனால், அந்தச் சமயம் பார்த்து, ஏதோ யாரோ சைகை காட்டி தூண்டி விட்ட மாதிரி, ஆடுகள் உரத்த குரலில் புதுப்பாட்டைப் பாடத் தொடங்கின.

“நாலு கால் நல்லது; இரண்டு கால் மிகவும் நல்லது, நாலு கால் நல்லது; இரண்டு கால் மிகவும் நல்லது. நாலு கால் நல்லது! இரண்டு கால் மிகவும் நல்லது.”

இந்தப் பாட்டை ஐந்து நிமிடங்கள் பாடின. ஒரு விநாடிகூட ஆடுகள் ஓயவில்லை. அதற்குப் பிறகு ஆடுகள் ஓய்ந்துவிட்டன. பின்னர், மற்ற மிருகங்கள் எதிர்த்து ஏதாவது சொல்லவேண்டும் என்கிற எண்ணத்தைக் கைவிட்டுவிட்டன. எண்ணத்தைக் கைவிட்டனவோ இல்லையோ, அவை வாயைத் திறக்கும் முன்னரே பன்றிகள் எல்லாம் வீட்டுக்குள் போய்விட்டன.

தன் தோள்பட்டையில் யாரோ மூக்கை வைத்துத் தேய்ப்பதை உணர்ந்தது பெஞ்சமின். வேறு யாருமில்லை, அது கிழட்டு க்ளோவர்தான். அதன் கண்கள் எப்போதையும்விட அதிகமாக மங்கியிருந்தன. எதுவும் சொல்லாமல், பெஞ்சமினின் பிடரி மயிரை வாயால் கவ்வி இழுத்தது க்ளோவர். பெரிய கொட்ட கையில் விலங்கு விதிகள் ஏழும் எழுதப்பட்டிருந்த சுவரண்டை போய் நின்றன இரண்டு மிருகங்களும். கருப்புத்தார் அடித்து, வெள்ளை எழுத்துகள் எழுதியிருந்த கவரைப் பார்த்துக் கொண்டே சில விநாடிகள் நின்றன.

கடைசியில் க்ளோவர் சொல்லியது: “கண் சரியாகத் தெரிய வில்லை; வாலிபத்தில்கூட எனக்குச் சுவரில் எழுதியிருந்ததைச் சரியாகப் படிக்க

வராது. இப்போது எப்படிப் படிக்கப் போகிறேன்? இன்று இந்தச் சுவரே கொஞ்சம் மாறியிருக்கிற மாதிரி எனக்குத் தோன்றுகிறது. நீ பார்த்துச் சொல், பெஞ்சமின்! அந்த ஏழு விதிகளும் அப்படியேதான் இருக்கின்றனவா? அல்லது மாறிவிட்டனவா? சொல்.”

வாழ்க்கையில் முதல்தடவையாக தன் கொள்கையிலே ஒன்றை மீறத் தயாராக இருந்தது பெஞ்சமின். சுவரில் எழுதி யிருந்ததை அது க்ளோவருக்கு வாசித்துக் காட்டச் சம்மதித்தது. இப்போது சுவரில் ஒரே ஒரு விதிதான் எழுதப்பட்டிருந்தது. அதை பெஞ்சமின் வாசித்தது:

எல்லா விலங்குகளும் சரிசமமானவை.

ஆனால், சில மிருகங்கள் வேறு சில மிருகங்களைவிட

அதிக சரிசமமானவை.

இதற்குப் பிறகு மறுநாள் காலையில் முன்னங்காலால் சாட்டையைத் தூக்கிக்கொண்டு பன்றிகள் பண்ணை வேலையை மேற்பார்வை செய்ய இரண்டு காலால் நடந்துவந்த போது, அது ஒன்றும் அதிசயமாகத் தோன்றவில்லை விலங்குகளுக்கு. பன்றிகள் ஒரு ரேடியோ வாங்கி வைத்திருந்தன என்பதும், அங்கே டெலிபோன் வைக்க முயற்சி செய்யப்படுகிறது என்றும், ‘ஜான்புல்’, ‘டிட்பிட்ஸ்,’ ‘தினக்கண்ணாடி’ முதலிய பத்திரிகை களுக்குச் சந்தா கட்டியாகிவிட்டது என்றும் கேள்விப்பட்ட மிருகங்கள், அது பற்றி அதிசயிக்க ஒன்றும் அவசியம் இருந்த தாக நினைக்கவில்லை. நெப்போலியன் பண்ணை வீட்டுத் தோட்டத்திலே வாயில் ஒரு சுருட்டைக் கவ்விப் புகைவிட்டுக் கொண்டு, குறுக்கும் நெடுக்கும் நடந்ததைப் பார்த்த மிருகங்கள், அதை அதிசயம் என்று கருதவில்லை. ஜோன்ஸ் வைத்துவிட்டுப் போன துணிகளையும் எடுத்து அணிந்துகொண்டு காட்சியளிக்கத் தொடங்கின பன்றிகள். கருப்புக் கோட்டு, சிவந்த நிறமுள்ள கால்சட்டை, பெல்ட் இவற்றுடன் நெப்போலியன் தோன்றிய போதும் மிருகங்கள் எதுவும் சொல்லவில்லை. நெப்போலி யனுக்கு மிகவும் வேண்டிய பெண் பன்றி ஒன்று ஜோன்ஸின் மனைவி அணிந்த பூப்போட்ட கௌனை உடுத்திக்கொண்டு நெப்போலியனுடன் தோட்டத்தில் உலாவியதைக் கண்ட மிருகங்கள் பேசாமல் இருந்தன.

ஒருவாரம் கழித்து மாலை நேரத்தில், விலங்குப் பண்ணைக்குப் பல விருந்தாளிகள் வந்தனர். ஆம், ரேக்ளா வண்டிகளில் பல மனிதர்கள் வந்தார்கள். இந்தப் பண்ணை எப்படி நிர்வகிக்கப் படுகிறது என்று பார்ப்பதற்காக பக்கத்துப் பண்ணைகளிலிருந் தெல்லாம் மனிதர்கள் வந்தார்கள். பண்ணை முழுவதும் வந்தவர்

களுக்குக் காட்டப்பட்டது. எல்லாவற்றையும் அவர்கள் ரொம்பப் பாராட்டினார்கள். காற்றாடியைப் பற்றி விசேஷமாக சிலாகித்துக் கொண்டார்கள். அந்தச் சமயம் மிருகங்களெல்லாம் கோதுமை வயலில் களைபிடுங்கிக்கொண்டிருந்தன. சுறுசுறுப்பாக அவை வேலை செய்தன. நிமிர்ந்தோ திரும்பியோ பாராமல் தலை குனிந்தபடி வேலையில் ஈடுபட்டிருந்தன. பன்றிகளைப் பற்றி பயப்படுவதா, அல்லது வந்திருந்த மனிதர்களைப் பற்றி பயப் படுவதா என்று அவற்றிற்குத் தெரியவில்லை.

இருட்டியபின் பண்ணை வீட்டிலிருந்து எழுந்த சிரிப்பும், பாட்டும் கூத்தும் கேளிக்கையும் மற்ற மிருகங்களின் காதுகளை எட்டின. மனிதக் குரலும் பன்றிகளுடைய குரலும் கலந்து கேட்கவே, அங்கு என்னதான் நடக்கிறது என்று பார்க்கவேண்டும் என்கிற ஆவல் விலங்குகளுக்கு மிகுந்தது. மிருகங்களும் மனிதர்களும் சரிசமமாகப் பழக ஆரம்பித்திருக்கிறார்களே; என்ன நிகழும் அங்கே? ஒன்றாக, சந்தடி செய்யாமல் அவை பண்ணை வீட்டுத் தோட்டத்திற்குள் புகுந்து மெதுவாகச் சென்றன.

கதவருகே நின்று அவை கொஞ்சம் தயங்கின. பயமாகத் தான் இருந்தது. எனினும் க்ளோவர் முன்னால் செல்லவே மற்ற மிருகங்களும் பின்தொடர்ந்தன. வீடுவரை போய், ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தன, அங்கே, பெரிய நீண்ட மேஜையைச் சுற்றி ஆறேழு குடியானவர்களும், உயர்ந்த பதவி வகித்த ஆறேழு பன்றிகளும் உட்கார்ந்திருந்தன. நெப்போலியன் மேஜையின் தலைப்பக்கம் உட்கார்ந்து தலைமை வகித்தது. நாற்காலிகளில் உட்கார்ந்திருந்த பன்றிகள், பழகியவைபோல சௌகரியமாகத் தான் உட்கார்ந்திருந்தன. எல்லோருமாகச் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். இப்போது ஆட்டத்தை நிறுத்தி விட்டு, ஒரு தரம் குடிப்பதற்குத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். மனிதர்கள் பன்றிகளுடன் சேர்ந்து “டோஸ்ட்” குடிக்கத் தயாராகிக் கொண்டிருந்தனர். ஒரு பெரிய பீர் ஜாடி கைக்குக் கை மாறியது. ஒவ்வொருவர் முன்னாலேயுமிருந்த கிண்ணங்களில் பீர் நிரம்பி இருந்தன. ஜன்னலில் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டு நின்ற மிருகங்களை பன்றிகளோ குடியானவர்களோ கவனிக்கவே யில்லை.

கையில் பீர் கிண்ணத்துடன் பாக்ஸ்வுட் பண்ணை முதலாளி பில்கிங்டன் எழுந்து நின்றான். ஒரு நிமிடத்தில் அவன் விருந் தாளிகளையும் வீட்டுக்காரார்களையும் ஒரு “டோஸ்ட்” குடிக்கச் சொல்லுவான். அதற்கு முன் அவன் சில வார்த்தைகள் பேச விரும்பினான்; ஏதோ சில விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டியது தன் கடமை என்று அவன் எண்ணினான்.

தனக்கும் அங்கு கூடியிருந்த சகலருக்கும் இது மிகவும் மகிழ்ச்சி தருகிற ஒரு விஷயம் என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் என்றான் அவன். நெடுநாளாக விலங்குப் பண்ணைக்கும் மற்ற பண்ணைகளுக்கும் இடையே இருந்த அவநம்பிக்கை, தப்பபிப்பிராயம் இப்போது மறைந்துவிட்டது பற்றித் திருப்தி யடையலாம். ஒரு காலத்தில் விலங்குப் பண்ணையின் நிர் வாகிகளை, பக்கத்துப் பண்ணைக்காரர்களான மனிதர்கள், அவமரியாதையாகவும், விரோத உணர்வுடனும் நடத்தினார்கள். ஆனால், அந்தக் கோஷ்டியில் தானில்லை என்று விளக்கினான் பில்கிங்டன்.

துரதிர்ஷ்டவசமான சில சம்பவங்கள் நடந்துவிட்டன. சில தவறான சிந்தனைகள் வதந்திகளாகப் பரவிவிட்டன. பன்றிக்குச் சொந்தமான, பன்றிகளால் நிர்வகிக்கப்பட்ட பண்ணையாவது, சரியாக நடக்கவாவது என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். அது இயற்கைக்கே விரோதமானது என்று சிலர் நினைத்தார்கள். மற்ற பண்ணை முறைகளை அது கவிழ்த்துவிடலாம் என்று மற்றவர்கள் பயப்பட்டார்கள். சரியாக விசாரிக்காமல், விலங்குப் பண்ணையில் அடக்கமின்மையும் ஆபாசங்களும் நிறைந் திருந்தன என்று முடிவுகட்டிவிட்டார்கள். தங்கள் மிருகங்களை பக்கத்துப் பண்ணையின் விலங்குகளின் நடவடிக்கைகள் எப்படிப் பாதிக்குமோ என்று அவர்கள் பயந்தார்கள். ஆனால், அப்படிப்பட்ட சந்தேகங்கள் எல்லாம் இப்போது தீர்ந்துவிட்டன. இன்று தானும் தன் நண்பர்களும் வந்து விலங்குப் பண்ணையைப் பார்த்த பிறகு இந்த மாதிரி சந்தேகங்களுக்கெல்லாம் இனி இடமே கிடையாது என்பது தெளிவாகிவிட்டது. உண்மையை நேரில் பார்த்து அவர்கள் அறிந்துகொண்டுவிட்டார்கள்.

மிகவும் நவீன முறையில் இயங்குகிறது பண்ணை; அடக்கமும் உழைப்பும் எங்கும் வெளிப்பட்டன. மற்ற பண்ணைகள் இந்தப் பண்ணையின் வழிகளைப் பின்பற்றுவது சாலவும் சிறந்ததாகும். இட்ட வேலையை விலங்குப் பண்ணை மிருகங்கள் செய்ததுபோல எந்தப் பண்ணையிலும் எந்த மிருகமும் எப்போதுமே வேலை செய்தது கிடையாது என்றான் பில்கிங்டன். வேலையும் நன்றாகச் செய்வதுடன் உணவும் குறைவாகவே பெற்றுக்கொண்டன இந்த மிருகங்கள். மற்ற இடங்களில் பார்க்கும்போது, உணவு ஒன்றில் பாதிப் பங்கு; உழைப்பு ஒன்றுக் கிரண்டு மடங்கு என்றுதான் சொல்ல வேண்டும். உடனடியாகத் தங்கள் பண்ணையில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்கள் சில வற்றைத் தானும் தன் நண்பர்களும் விலங்குப் பண்ணை யிலிருந்து கற்றுப் போவதாகச் சொன்னான் பில்கிங்டன்.

தன் பிரசங்கத்தை முடிக்கும்முன், கடைசி வார்த்தைகளில் ஒரு விஷயத்தை வற்புறுத்த விரும்பினான் பில்கிங்டன். விலங்குப் பண்ணைக்கும், அயலில் உள்ள பண்ணைக்கும் இடையே நட்புறவு நீடிக்கலாம்; நீடிக்கவேண்டியது மிகமிக அவசியம் என்று சொன்னான். மனிதர்களும் பன்றிகளும் எதிரி களாகத்தான் இருக்கவேண்டும் என்கிற அவசியமே கிடையாது. அவர்கள் போராட்டங்களும், லட்சியங்களும், முறைகளும் ஒரே மாதிரியானவைதான். தொழில் கஷ்டங்கள் எல்லோருக்கும் உள்ளவை தானே? கூலி வேலைக் கஷ்டங்கள் பொதுவானவை தான். பில்கிங்டன் சொல்லவந்த ஒரு விஷயத்தை எண்ணி அவனே அரை நிமிடம் சிரித்துவிட்டு, அவன் தொடர்ந்தான்: "உங்களில் தாழ்ந்த மிருகங்கள் இருக்கின்றன, உங்களுக்குத் தொல்லை கொடுக்க, மனிதர்களிடையே தாழ்ந்த ஜாதியினர் இருக்கிறார்கள். எங்களுக்குத் தொல்லை கொடுக்க" என்றான். இந்த வாக்கியம் அங்கிருந்தவர்கள் எல்லோருக்கும் எல்லையற்ற ஆனந்தம் தந்தது. எல்லோருமே உரக்கச் சிரித்தார்கள். பில்கிங்டன் மீண்டும் ஒருதரம் பன்றிகளைப் பாராட்டினான். கீழ்த்தர மிருகங் களிடம் சரியானபடி வேலை வாங்குவது பற்றியும், அவற்றுக்குப் போதிய உணவு தராமல் வைத்திருப்பது பற்றியும் பாராட்டினான். வேலை செய்பவர்களைச் செல்லப் பிள்ளைகளாக்கி விடக் கூடாது என்றான் அவன்.

இப்பொழுது கடைசியாக எல்லோரும் எழுந்து, கோப்பைகளில் மதுவை நிரப்பிக்கொண்டு ஒரு 'டோஸ்ட்' சாப்பிட வேண்டு மென்றான். "கனவான்களே! இது என் டோஸ்ட். விலங்குப் பண்ணை இன்னும் பணக்காரப் பண்ணையாகச் செழித்தோங் கட்டும்!" என்று முடித்தான் பில்கிங்டன்.

மகிழ்ச்சியுடன் எல்லோரும் கைதட்டினர்; கால் தட்டினர். பில்கிங்டன் கிண்ணத்துடன் தன் கிண்ணத்தை மோதிச் சப்தம் உண்டாக்கிவிட்டுத்தான் நெப்போலியன் மதுவை அருந்தியது. கைதட்டல் ஓய்ந்த பிறகும் நெப்போலியன் நின்றுகொண்டிருந்தது. சில வார்த்தைகள் சொல்ல விரும்புவதாகச் சொல்லிவிட்டுத் தொடங்கியது அது.

நெப்போலியனின் பிரசங்கங்கள் எல்லாமே ரத்தினச் சுருக்கமாகவும் விஷயத்தை விட்டு அப்பால் செல்லாதவை யாகவும்தான் இருக்கும், ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளாத கட்டம் முடிந்துவிட்டது பற்றித் தனக்குச் சந்தோஷமென்றது அது. யாரோ ஊர் பெயர் தெரியாத எதிரி கிளப்பிவிட்ட வதந்திகளால், தன் நோக்கங்களும் லட்சியங்களும் புரட்சிகரமான தாகவும், எதையும் தலைகீழாகப் புரட்டிவிடுவதாகவும்

ஏதோ இருப்பதாகப் பலரும் நம்பி வந்தார்கள். அண்டையிலுள்ள பண்ணை மிருகங்களிடையே புரட்சியை கிளப்பிவிடத் தாங்கள் முயற்சி செய்வதாகக்கூட மனிதர்கள் நம்பினார்கள் என்பது தனக்குத் தெரியும் என்றது நெப்போலியன். உண்மைக்கு நேர் எதிர்மாறான பிரச்சாரம் இதெல்லாம். இன்றும் சரி, முன்பும் சரி நெப்போலியனுக்கும் அவன் சகாக்களுக்கும் உள்ள நோக்கம் ஒன்றுதான். எல்லோருடனும் சமாதானமாக, சிநேகிதமாக, அனைவருடனும் நல்லுறவு பூண்டு வாழவேண்டுமென்பதுதான் அதன் நோக்கம். தன் நிர்வாகத்திலிருந்த பண்ணை ஒரு கூட்டு முயற்சி; பண்ணையின் சொந்தக்காரர்கள் அங்கிருந்த எல்லாப் பன்றிகளும்தான் என்றது நெப்போலியன்.

பழைய சந்தேகங்கள் இப்போது மனிதர்களிடையே இல்லை என்பது தனக்குத் தெரியும் என்றது நெப்போலியன். கொஞ்ச நஞ்சமிருந்த சில சில்லறைச் சந்தேகங்களையும் போக்கக் கூடிய வகையிலே சில மாறுதல்கள் பண்ணை நிர்வாகத்திலே செய்யப் பட்டிருந்தன. 'தோழர் நெப்போலியன்' என்று இன்று வரை பண்ணை மிருகங்கள் எல்லாம் அதை அழைத்து வந்தன. இனி அவை அப்படி அழைக்கக்கூடாது என்று உத்தரவிடப்படும். இதைத் தவிர, தோட்டத்துக் கொட்டகைச் சுவரில் மாட்டப் பட்டிருந்த ஒரு பன்றியின் தலையை வணங்கும் பழக்கம் காரணமில்லாமலே பல நாட்களாக இருந்து வந்திருக்கிறது. அதையும் நிறுத்திவிட ஏற்பாடாகிவிட்டது. அந்தத் தலை அப்புறப்படுத்தப்பட்டுவிட்டது. வந்திருந்தவர்கள் கொடி மரத்திலுள்ள கொடியைப் பார்த்திருப்பார்கள். அதில் ஒரு குளம்பும் கொம்பும் தீட்டப்பட்டிருந்தது. அதையும் அகற்றிவிட உத்தரவாகிவிட்டது. இனிமேல் ஒரு பச்சைத் துணிதான் கொடியாக இருக்கும்.

ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் பில்கிங்டன் செய்த பிரசங்கத்தில் திருத்தம் செய்ய வேண்டியது அவசியமாகிறது என்றது நெப்போலியன். விலங்குப் பண்ணை என்றே அவர் பிரசங்கம் பூராவிலும் இதைக் குறிப்பிட்டார். அவருக்கு அது தெரிய நியாயமில்லை; ஏனென்றால் இப்போது தானே முதன் முதலாக தன் மனத்திலிருப்பதை வெளியிடுகிறது. விலங்குப் பண்ணை என்கிற பெயரையும் ஒழித்துக்கட்டியாகிவிட்டது. இனிமேல் இந்தப் பண்ணைக்கு பழைய பெயரையே இட்டு அழைக்கலாம். 'மேனர்பண்ணை' அதாவது பெரிய பண்ணை என்பதுதான் அதனுடைய பழைய, சரியான பெயர் என்றது நெப்போலியன்.

"கனவான்களே" என்று முடிவுக்கு வந்தது நெப்போலியன். "முந்திய 'டோஸ்டை'யே நானும் உங்களுக்குச் சொல்கிறேன். ஆனால், அதன்

உரிய பெயரைக் குறிப்பிடுகிறேன். பெரிய பண்ணையின் சுபிட்சத்துக்காக என்னுடன் நீங்களும் குடியுங்கள்!”

முன்போலவே கைதட்டலும் கால் தட்டலும் பலமாக இருந்தது; மதுக் கிண்ணங்கள் காலியாயின. வெளியே இருந்து உள்ளே பார்த்துக்கொண்டிருந்த மிருகங்களின் கண்களில் ஒரு விசித்திரமான காட்சி தென்பட்டுக்கொண்டிருந்தது. இந்தப் பன்றிகளின் முகங்கள் ஏன் இப்படி மாறுதலடைகின்றன? ஒவ்வொரு பன்றியின் முகமாகக் கவனித்தது க்ளோவர். சில பன்றிகளின் மோவாய்க் கட்டையில் ஐந்து மடிப்புகள் இருந்தன; சிலவற்றிற்கு நாலு மடிப்புகள் இருந்தன; சிலவற்றிற்கு மூன்றிருந்தன. இதெல்லாம் இப்படி ஏன் என்னவோ போல உருமாறுகின்றன? தன் கிழட்டுக் கண்கள்தான் தன்னை ஏமாற்றுகிறதோ? ஆரவாரம் எல்லாம் அடங்கியதும் மனிதர்களும் பன்றிகளும் சீட்டுகளை மீண்டும் எடுத்துக்கொண்டன. இடையில் நிறுத்தியிருந்த ஆட்டத்தைத் தொடர்ந்தன. வெளியேயிருந்து பார்த்துக்கொண்டிருந்த மிருகங்கள் சந்தடி செய்யாமல் நகர்ந்தன.

ஆனால், அவை இருபது அடி தூரம் போவதற்குள் உள்ளே யிருந்து பிரமாதமான சண்டையும் கூச்சலும் கேட்கவே பிரமித்து நின்றன. ஓடிப்போய் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தன. ஆம். உள்ளே ஒரு சண்டை நடந்துகொண்டிருந்தது. ஒருவரை ஒருவர் பார்த்து உரக்கக் கத்திக்கொண்டிருந்தார்கள். மேஜை மேல் அடித்தே பேசினார்கள் ஒவ்வொருவரும். சந்தேகத்துடன், ஒரு வரை ஒருவர் கொன்றுவிட விரும்புகிறவர்கள் போலப் பார்த்துக் கொண்டார்கள். சண்டைக்கு ஆதாரம் இதுதான். நெப்போலியனும் பில்கிங்டனும் ஒரே சமயத்தில் தங்கள் கையிலிருந்த ஆளுக் கொரு இஸ்பேட் ஆஸை இறக்கியிருந்தார்கள். ஒரே கட்டில் இரண்டு இஸ்பேட் ஆஸ்களா?

பன்னிரண்டு குரல்கள் கோபமாகக் கூச்சலிட்டன. பன்னிரண்டு குரல்களுமே ஒரே மாதிரித்தான் இருந்தன. இப்போது பன்றிகளின் முகங்கள் எப்படி மாறியிருந்தன என்பது பற்றிச் சந்தேகத்துக்குச் சிறிதும் இடமேயில்லை. பன்றியிலிருந்து மனிதனையும், மனிதனிலிருந்து பன்றியையும் மாறிமாறிப் பார்த்தன வெளியே நின்ற விலங்குகள். எது பன்றி, எது மனிதன் என்று பிரித்துச் சொல்லமுடியாதபடி இரு இனத்து முகங்களும் ஒன்றாகிக் கொண்டிருந்தன.

•••